# இஷ்டலிங்கவகவல்

மூலமும் உரையும்

குருபசவா அண்டு கம்பேனி லிமிடேட்

சிவசாரமாலா ஸங்க்யா கச

உ

சிவமயம்

துறைமங்கலம் அல்லது நல்லாற்றூர்

கருணைப்பிரகாச சுவாமிகள்

அருளிச் செய்த

# இஷ்டலிங்க வகவல்

இது

மேட்டுப்பாளையம்

வித்வான் வீ. குமாரசாமி ஐயரவர்கள்

எழுதிய உரையுடன்

S. C. நாகீ செட்டியாரவர்களின்

நன் முயற்சியால்



சென்னை

குருபசவா அண்டு கம்பெனி லிமிடெட்

அவர்களால் வெளியிடப்பட்டது



1935

[illegible] மனக்கு வாய்த்ததுமே.

சிவமயம்

# நூலாசிரியர் வரலாறு



இந் நூலாசிரியராகிய கருணைப்பிரகாசசுவாமிகள் இடைக்காலத்துத் தமிழ்ப்புலவர்களுள் ஒருவராவர். இவர் காஞ்சீபுரத்தில் ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் வசித்திருந்தவரும், வீரசைவமதத்தைச் சார்ந்தவருமாகிய குமாரசுவாமி ஐயருக்குத் தோன்றிய இளைய புதல்வராவர். கவிஞர் கருத்தை விட்டகலாப் புலவர் பெருமானாகிய துறைமங்கலம்-சிவப்பிரகாசசுவாமிகளும், சீகாளத்திப் புராணம் பாடிமுடித்த வேலையசுவாமிகளும் இவருக்கு முன்னவராவர். இவர் தந்தையாரும் தமிழ்ப் புலமை யுடையவராவர். *“கயல் வாய்த்த” என்ற தனிச்செய்யுள் அவர் பாடியதாம். இவருடைய தங்கையின் கொழுநராகிய பேரூர்-சாந்தலிங்கசுவாமிகளும் தமிழ்ப் புலமை மிக்க பெரும்புலவராவ ரென்பது யாவரு மறிந்ததேயாம். ஆகவே, இவர் புலவர் குடும்பத்திற் றோன்றிய புலவராவரென்பது நன்கு தெளிவாம்.

தந்தையாராகிய குமாரசுவாமி ஐயர் இவரது இளமைப் பருவத்திலேயே சிவபதமடைந்தனர். பின்னர், இவர் சிவப்பிரகாச அடிகளையே ஆசிரியராகக் கொண்டு கல்வி கற்றுப் புல்மையுற்றனர். இதனைத் தாமே, சீகாளத்திப் புராணப் பாயிரச் செய்யுள்களில் ஞானாசிரியர் வணக்கத்தின் பின்னர்,

“ புனையெழில் வடிவி னாளோர்
பொதுமகட் கண்ட மைந்தர்
[illegible]னமெனப் புலவர் நெஞ்ச
மருளுமின் றமிழ்ப்பா மாலை

---

* கயல்வாய்த்த கண்ணி யுலகீன்ற வல்லிபங் காவுன்து
செயல்வாய்த்த வன்பர்க்கு மல்லாத வர்க்குஞ் சிரிப்பல்லவோ
இயல்வாய்த்த வெந்தைக் கியான்வாய்த் ததுமிங்கென் றனைத்து
வயல்வாய்த்த தமனை வாய்த்தது மைந்தர்கள் வாய்த்ததுமே.

சினவிடை யவற்கே சாத்துஞ்
  சிவப்பிர காச னென்னு
முனிவனெம் மடிகள் பாத
  முளரிகள் சென்னி சேர்ப்பாம்.

என்றும்,

எவனொரு நொடியி லெண்ணூ
  றிசைத்ததோர் செய்யுண் மற்றைக்
கவிகள்பன் னூணி னைந்த
  காப்பியங் கட்கு மேலாம்
எவன்இறை முதனூ மத்தோ
  டியைதரும் விளக்கப் பேரோன்
அவனொடு பிறப்பெ மக்கீண்
  டளித்தபால் வாழ்க மன்னோ.

என்றும் துதிகூறும் செய்யுள்களானும்,

குன்றலில் இசையார் சிவப்பிர காசக்
  கோதிலாத் தமிழ்க் கடன் முகந்தே
என்றுமின் றுறவே பொழிதரு கருணை
  விளக்கமென் றியம்புமா முகிலே.

எனக் கூறும் சிறப்புப் பாயிரச் செய்யுளடிகளானும் நன்கறிய லாம்.

மற்றும், இவருடைய ஞானசிரியர் திருவண்ணாமலையில் கோவிற்குத் தெற்கு வீதியிலுள்ள திருமடத்தில் எழுந்தருளி யிருந்த குருதேவர் என்னும்சுவாமிகளாவர். இதனை இவர் கூறும்

புனிற்றிளந் திங்கள் வேய்ந்த
  புரிவளர் சடையு நெற்றிக்
கனற்றிரு விழியு மானுங்
  கரந்துவந் தென்னைப் பாச
மனைத்தையும் அறுத்தாட் கொண்ட
  அருட்குரு தேவன் என்னும்

தனிப்பெருங் கருணை வள்ளல்
தன்னடி மனத்துள் வைப்பாம்.

என்னும் துதிகவியால் அறியலாம்.

இவர் இளமைப் பருவத்திலேயே சொன்னயம் பொருணயம் படவும், நுண்ணிய கருத்தமையவும் யாப்பியற்றும் வன்மையுடையவராயும், விரைவிற்பாடும் ஆசுகவியாகவும் விளங்கினர். ஒரு நாள் இவரை ஆதரித்து வந்த, * “ வண்புலவர் — தம்மை விழிகாக்குந் தகவி னிமைபோலச் செம்மை பெறக் காக்கும் ” சீருடையவராக விளங்கிய வெங்கைநகர்-வல்லகோலாதிபதி அண்ணாமலை ரெட்டியார் திருமணம் செய்து கொள்ளும் விருப்பத்தை யறிவிக்கத் தம்மை வினவிய பொழுது,

நாணி யென்பதை நாரியென் றுரைத்திடு நசையால்
வேணு வானது வளைந்துபோய்ப் புகுந்தது வென்றாற்
காண லாவதோ ருருவமெய்ந் நாரியைக் கண்டாற்
பூணு வார்மயல் காளைய ரென்பதும் புதிதோ.

என்ற செய்யுளை உடனே விடையாகக் கூறியருளினர். இச் செய்யுளின் நயத்தை ஒவ்வொரு புலவர்களும் எடுத்துக் கூறி யுவகை யுறுவது நாம் கண்கூடாகக் காண்பதொன்றே யாம்.

இவர் இயற்றிய நூல்கள் இஷ்டலிங்க அகவலும், சீகாளத்திப் புராணத்தில் முதல் ஐந்து சருக்கங்கள் விருத்தப் பாக்களால் தமிழில் மொழி பெயர்த் தனவுமாம்.

இவர் இலக்கண இலக்கியங்களிற் புலமையுற்றிருந்தாற் போலவே வேதாந்தம், சித்தாந்தம், சோதிடம், மாரதந்திரம் முதலிய பிற கலைகளிலும் வல்லுநராயிருந்தார். தமிழ்மொழியையும், சங்கப் புலவர்களையும் தெய்வமாகக் கருதினர். வடமொழித் தொடர்களைத் தமிழ்மொழி யில் அழகுபெற மொழிபெயர்த் தாளுதலும், தம் முன்னவராகிய சிவப்பிரகாச சுவாமிகளின் நூற்கருத்துக்களையும், கற்பனைகளையும், சொற்றொடர்களையும் பொன்னேபோற் போற்றித் தம்

* திருவெங்கையுலா. 56.

நூலின்கண் எடுத்தாளுதலும், தன்மை யணிபடத்தாமே புதிய வுவமைகள் கூறுதலும் இவருடைய செய்யுள்களால் நன்குணரத் தக்கனவாம். மற்றும், இவருடைய செய்யுள்கள் ஆற்றொழுக்காயும், நவின்றோர்க்கினிமை பயப்பனவாயும் திட்பநுட்பம் அமைந்த பொருளனவாயும் விளங்கும்.

ஆண்டதனுல் எனையொவ்வாய் வித்தையினில்
தமையனினும் அதிக மென்றே
பூண்டவுல கதனிலுள்ளோர் புகல்வதுகேட்
டிருந்துமென்ன புதுமை தானே ?

எனத் தம் முன்னவரே மொழி வாராயின் கலைத்துறை முற்றிய கவிஞர் பெருந்தகையாராகிய இவரது புலமைத் திறம் எம்மனோரால் புகலுந்தரத்ததோ !

இவர் மிகுதியாக வெங்கைநகரில் அண்ணாமலை செட்டியார் கட்டுவித்த திருமடத்திலேயே வசித்து வந்தார். இவருக்குச் சிவாநந்தம் என்ற ஒரு பெண் மகவுண்டு. குடந்தை பெரியமடம் வீரசிங்காதன சாரங்கதேவர் அடியாராகிய (சிஷ்யர்) நல்லாற்றூர்மடம் கனகசபை ஐயர் குடும்பத்து நித்திய சௌபாக்யவதி அம்மாளுக்குத் தோன்றியவரும், பொம்மபுரம் - சிவஞானபாலைய சுவாமிகளால் வளர்க்கப்பட்ட வருமாகிய அமிர்தபாணி ஐயருக்குப் பொம்மபுரம் சுவாமிகள் கட்டளைப்படி சிவப்பிரகாச சுவாமிகள் சிவாநந்த அம்மையாரை வாழ்க்கைப் படுத்தற்கியைய, அச் சுவாமிகளே தம் முன்னிலையில் திருமணஞ் செய்வித்தனர். சின்னுட்களுக்குப் பின்னர்த் திருவெங்கை நகரத்தில் இவர் பருவுடலைநீத்து அருவுடம்புற்றனர். அஞ்ஞான்று இவருக்கு ஆண்டு பதினெட்டென்பர். இவர் பிரிவாற்றாமை கருதி,

முன்னமொரு தமிழ்ப்புலவன் றனையுண்டு
கண்டசுவை முதிர்ச்சி யாலே
தன்னியலை முழுதுமுணரத் தமையாமுன்
னினைக்கவர்ந்து தடங்கா ளத்தி

மன்னவனுண் டானெனது மாதவத்தின்
வலிதீர மண்ணின் மீதே
என்னுடன்வந் தவதரித்த இளங்கருணைப்
பிரகாசன் என்னுங் கோவே.

எனச் சிவப்பிரகாச அடிகளும்,

ஆண்டதனு லெனையொவ்வாய் வித்தையினிற்
றமையனினும் அதிக மென்றே
பூண்டவுல கதனிலுள்ளோர் புகல்வதுகேட்
டிருந்துமென்ன புதுமை தானோ
காண்டருகண் மணியே! நல் இளங்கருணைப்
பிரகாசக் காளாய்! நீதான்
மாண்டனையென் றறிந்திருந்தும் உயிர்தரித்தேன்
யானுமிக வன்னெஞ் சேனே.

எனவேலைய சுவாமிகளும் பணித்தருளினர். சிவப்பிரகாச சுவாமிகள், வேலையசுவாமிகள், கருணைப் பிரகாச சுவாமிகள் ஆகிய இம் மூவரும் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய்த் தங்கள் வாணாளை உலகிற்கே பயன்படுத்தியோ ராவர். இவர்கள் வாழ்ந்த காலம் சிறிதே யாயினும் சமய நூல்கள் பலவும், இலக்கிய நூல்கள் பலவும் இயற்றிச் சமயத்தையும், தமிழ்மொழியையும் வளர்த்துள்ளார்கள். இவர்கள் மூவரும் இயற்றிய நூல்களின்றொகை நாற்பத்திரண்டாகு மென்ப. இவர்கள் காலமாகிய கி. பி. பதினேழாவது நூற்றாண்டிற்கு முன்னர்த் தமிழ் மொழியில் இயற்றிய வீரசைவமத நூல்கள் ஒன்றும் காணப்படவில்லை. இவர்களே தங்கள் மதக் கருத்துக்களையும், வரலாறுகளையும் கற்றோர் பலரும் அறிந்து பாராட்டுமாறு முதன் முதலாக விளக்குமுற நூலியற்றியருளிய பாவலராவர். இவர்களைத் தமிழ் நாட்டு வீரசைவ சமயகுரவர்களென்றே கூறலாம். ஆகையால், இம் மூன்று தமிழ்ப் பெரும் புலவர்கள் புரிந்துள்ள நன்றியைத் தமிழுலகமும், சமயவுலகமும் என்றுங் கருதும் கடப்பாடுடையவாம்.

நூலாசிரியர் வரலாறு முற்றிற்று



# உரையில் எடுத்தாண்டுள்ள நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற் குறிப்பு முதலியன

1. அகநானூறு — அகம்.
2. இளம்பூரணருரை.
3. இறையனாரகப்பொருளுரை.
4. கந்தபுராணம் — கந்த.
5. கம்பராமாயணம் — கம்ப.
6. குறுங்கழிநெடில் — குறுங்கழி.
7. குறுந்தொகை — குறுந்.
8. சிந்தாமணி — சிந்தா.
9. சிறுபாணாற்றுப்படை — சிறுபாண்.
10. சுந்தரர் தேவாரம்.
11. சேனாவரையருரை.
12. தணிகைப் புராணம் — தணிகை.
13. திருக்கோவையார் — திருக்கோ.
14. திருமுருகாற்றுப்படை — திருமுருகு.
15. தொல்காப்பியம் — தொல்.
16. நச்சினார்க்கினியருரை.
17. நன்னூல் — நன்.
18. நிகண்டு.
19. நிரஞ்சன மாலை — நிரஞ்ச.
20. நெடுங்கழிநெடில் — நெடுங்கழி.
21. பரிமேலழகருரை.
22. பிரபுலிங்க லீலை — பிரபு.
23. புறநானூறு — புறம்.
24. புறநானூற்றுரை.
25. பெரிய நாயகியம்மை நெடுங்கழி நெடிலாசிரிய விருத்தம். — பெரிய நாயகி — நெடுங்கழி.
26. பேராசிரியருரை.
27. மணிமேகலை — மணிமே.

சிவமயம்

அண்ணமலைப் பல்கலைக் கழகத்து இயற்றமிழாசிரியராகிய

# உயர்சைவத் திருவாளர் - கந்தசாமியாரவர்கள்

## எழுதிய சிறப்புரை.



மண்ணியனுடு பலவற்றுள்ளும் புண்ணியநாடாகிய நந் தண்ணிய தமிழ்நாட்டினெரு பகுதியாகிய தொண்டைநாட்டின் கண்ணுள்ள காஞ்சிக்கண் இற்றைக்குச் சற்றேறக்குறைய மூந்நூறுண்டுகளுக்கு முன்னர்க் கொண்டைகட்டி வேளாண் மரபினர்க்குக் குருவாகக் குமாரசுவாமி தேசிகரெனும் பெரியா ரொருவர் இருந்தனர். இவர் இறைவன் திருவருட் குறிப்பானும், முன்னர்ச் செய்த நற்றவப் பேற்றானும் வீரசைவ சமயத்துட் சென்று அம்மதக் கொள்கையை விதந்தோதும் ஆகமங்களில் விதித்துள்ள முறைப்படி இலிங்கதாரணை முதலியன செய்துகொண்டு மலபரிபாகமெய்தி ஒப்புயர் வற்ற மாகேசுரராக வீறெய்தி விளக்க முற்றிருந்தனர்.

இவர்பால் தமிழ்நாடு செய்த தவப் பேற்றால் அஞ்ஞான விருளகன்றேட இளவள ஞாயிறு எழிலுற மூன்று தோன்றினுற் போலக் கண்டோர் நெஞ்சங் காமுறும் வண்ணம் சிவப்பிரகாசர், வேலையர், கருணைப்பிரகாசராகிய மூவருந் தோன்றினர். இவர்கள் இளமைப் பருவத்தே நல்லாசிரியனை யடைந்து, பிற்றை நிலை முனியாது பல் நூல்களை யுங் கற்றுப் பத்திச்சுவை நனி சொட்டும் பாக்களை விரைவி லியாக்கும் பான்மை யெய்திய பெரும் பாவலராக விளங்கினமை நம் தமிழகம் நன்கறிந்த தொன்றேயாம்.

இம் மூவருள் நங் கருணைப்பிரகாசர் அஞ்ஞான்று ஆண்டில் இளைஞராயினும் அருங்கவி புனையும் ஆற்றலில் அவ் விருவரினும் வீறெய்தி விளக்க முற்றிருந்தா ரென்பதை இவருடன் பிறந்தா ரிருவரும் வியந்துவந்து கூறியிருப்பதால் நன்கறியலாம்.

இவ் விளங்குருளைப் புலவர் சீகாளத்திப் புராணம் முற்பகுதி, இட்டலிங்க அகவல் முதலிய நூல்களை யியற்றினர். கல்வியின் றுறை போகிய இவர் தம் மதிநுட்பமும், பொருள்களைப் புனைந்துரைக்கும் பேராற்றலும் சீகாளத்திப் புராணம் முற்பகுதியின் கண்ணுள்ள செய்யுள்களி னடிதோறும் மிளிர்ந்து கிடத்தலைப் புலத்துறை முற்றிய நலத்தகையார் பலரும் நன்கறிவர்.

இப்புலவர் பெருமான் இட்டலிங்கப் பெருமானைக் காதலத் தெழுந்தருளச் செய்து வழிபட்டெய்திய இன்பினைக் கறைகெழு மறிவும் முறைபிறழ் செயலுமுடைய உலகமுமடைந்து உய்வான் வேண்டி, இட்டலிங்க அகவலென்னும் இந்நூலை யாத்தனரென்ப. இந்நூல் கல்லும், புல்லும், செல்லும், முருட்டுப் பாவகாரிகள் தீவழிப் படரும் உள்ளமுருக இன்னோசைதழுவிப் பதி பசுபாச விலக்கணங்களும், அப் பதிப்பொருளை வழிபட்டுய்யுமுறையும் பிறவும் நன்கமையப்பெற்று இன்ப நலங் கனிந்து எழிலுற்று இலங்குவதைப் பயின்றார் பலரும் பகர்வர் ; யான் கூறல் மிகையாம்.

இத் தகைய பெறலரும் நூலுக்கு உரையின்மையான் இதனைப் பயில்வோர் குன்றுமுட்டிய குரீஇப் போலவும், குறிச்சி புக்க மான் போலவும் இடர்ப்படுதலை யுணர்ந்து அண்ணாமலை செழுங்கலை நியமத்துள்ள அடிப்பட்ட சான்றோரிடத்துத் தொல் காப்பியங்களையும், தொல்காப்பியத்தினையும் முறைப்படப் பயின்று வித்துவான் என்னும் சிறப்புப்பெயர் எய்தியவரும், அஃகியகன்ற நுண்மாண் நுழைபுல முடையாரும், வீரசைவாகமங்களிற் கூறிய நடைகளிற் சிறிதும் வழுவாதவரும், அடக்கம், பொறை, வாய்மை முதலிய நற்குணங்கள் இயல்பின் அமையப் பெற்றவருமாகிய குமாரசாமி ஐயர் என்பார் இனிய பதவுரையும், குறிப்புரையும், இலக்கணமுடிபுகளும் வரைந்துள்ளனர். இவ் வுரையில் அடியார்க்குநல்லார், சேனாவரையார், பேராசிரியர், பரிமேலழகர், நச்சினார்க்கினியர் முதலிய வுரையாசிரியர்கள் தங்கள் உரையில் அமைத்தெழுதிய நயங்கள் விளங்குதலைக் கண்டு, நான் அடைந்த இன்பினுக்களவின்று. பேரறிவுடைய பெரியார் செய்யத் தகும் இச் செயற்கருஞ் செயலினைச் செய்த இவர் ஆண்டில் இளையராயினும் அறிவிற் பெரியாராகக் காணப்படுகின்றார். இவர்பால் இக் காளைப் பருவத்தே இத் தகைய உரையியற்றும் பேராற்றல் இயல்பின் அமைந்திருப்பதை நோக்கின், இவர் பிற்காலத்துப் பேருரையியற்றும் பெரும்புலவராக விளங்குவரென்பதில் எட்டுணையும் ஐயமின்றெனக் கருதுகின்றேன்.

இவர் இத் தொடுகடல் வரைப்பிற் செம்மை நலனுற்றுப் பல்லாண்டு வதிந்து இத் தகைய செயற்கரும் பணிகள் தமிழகத்திற்கியற்றுமாறு பிறவாயாக்கைப் பெரும் பேரியவனை மனமொழி மெய்களான் வந்தித்துச் சிந்தித்து வணங்குகின்றேன்.

சிதம்பரம்
1—3—1932

இங்ஙனம்,
கந்தசாமியார்.

இராமநாதபுரம் சமஸ்தான வித்வானும்
அண்ணாமலை சர்வகலாசாலைத் தமிழாசிரியருமாகிய
உயர்திருவாளர்
**சர்க்கரை இராமசாமிப் புலவரவர்கள்**
இயற்றியருளிய

# சிறப்புப் பாயிரம்



1. வட்டமதி நிகர்வதனத் துமையுடனே
   சிவபெருமான் வதிந்த பூசைப்
   பெட்டகத்தை மறந்ததனால் வீரசைவப்
   பெரும்பேறு பெற்றோன் மைந்தன்
   சிட்டரெலாம் புகழ்கருணைப் பிரகாச
   னெனும்புலவர் திலகன் செய்த
   இட்டலிங்க வகவலுக்கோ ரினியவுரை
   கனியவுரைத் திசைபெற் றானே.

2. இன்னனியா ரெனிற்றேவர் மகன்றந்தை
   யெனுங்குறளுக் கிலக்கா யுள்ளோன்
   மன்னரெலாம் புகழண்ணா மலைபல்கலைக்
   கழகத்து வாசித் தோர்விற்
   பன்னர்சிகா மணியுயரன் பாலரனைக்
   கரத்தில்வைத்துப் பணிந்து போற்று
   மன்னுசெல்வக் குணநிதிகு மாரசாமித்
   தமிழ்நா வலவ ரேறே.

உ

சிவமயம்

# இஷ்டலிங்க வகவல்

## மூலமும் உரையும்



### நேரிசை யாசிரியப்பா

விரிகட லாடைப் பெருநில மடந்தைக்
கரும்பெற லாரம் புரைந்தினி தொழுகும்
பொருதிரைப் பொன்னித் திருவரங் கத்துப்
புதுவெயி லெறிக்குங் கதிர்மணி சுமந்த
வாயிரஞ் சுடிகை மாயிரும் பாந்தட்
பள்ளி மீமிசை யொள்ளொளி மின்னொடு
கருமழை கிடந்த காட்சி போலப்
பிறைநுதற் றிருவோ டறிதுயி லமர்ந்த
புரிவளைத் தடக்கைப் பெரியோன் றனு
மலர்தலை யுலகம் பலவும் பயந்து
தெய்வத் தாமரைத் திருத்தவி சிருக்கு
மசைவில் காட்சித் திசைமுகத் தொருவனு
மீண்டித னடியுஞ் சேண்டொடு முடியுந்
தனித்தனிக் காண்குது மெனத்தமி லிசையா
விலங்கு பிறை மருப்பின் விலங்குரு வெடுத்து
நெடுநிலங் கிளையா வுடன்மிகத் தளர்ந்து
நிறைமதி நிறத்துப் பறவையுருப் பரித்து
வானகம் பறந்து மேனிநொந் திளைத்துங்
காண்டல் செல்லா தியாண்டுபல கழிய
மண்டழற் பிழம்பாய்ப் பண்டு நின்றோன்
பூசனை விடுத்த மாசுபுரி நெஞ்சத்து

வீயா வஞ்சத் தீயோ ரிருந்த
கடிகொண் மூ வெயிலும் பொடிபட நகைத்தோன்
பொன்னி னியன்றன மென்ன றாங் கொன்றையும்
வெள்ளியிற் குயின்றன * வெள்ளையெருள் ளெருக்கு
மொழுகொளி மரகதத் தெழில்பெறச் செய்தன
வறுகும் வில்வச் செறிபசுந் தழையுந்
தும்பையு மத்தமும் வம்பவி ழாத்தியுங்
கொழிக்கு மிருந்திரைக் குளிர்புனற் பெருக்கிற்
சிறுவெள் ளோதிமந் திரிதர லென்ன
வெண்ணில வொழுக்குந் தண்மதிக் கொழுந்து
திரிதரச் சிறந்த செக்கரஞ் சடையோன்
மன்றலம் பொருதியிற் றென்றலந் திருத்தேர்த்
திங்களங் கவிகை யையங்கணைக் கிழவனைப்
பற்றிய செந்தீ நெற்றிநாட் டத்தோ
னருடிரண் டெழுந்த வுருவமென் றுணர்த்தி
யிருள்குடி யிருந்த திருவமர் மிடற்றோ
னேனையோர்க் கிறைமை யின்மை காட்டி
முடங்குளை மடங்கன் முகனடுக் கோத்த
வெண்டலை மாலை கண்டவர் வெருவத்
தண்டாது கிடக்குந் திண்டோட் பொருப்பினன்
அண்டப் பித்திகை விண்டிட வதிர்க்குந்
தீவாய்ப் பிணையும் பூவாய்க் கணிச்சியு
மன்ன முயர்த்தோன் சென்னிக் கடிஞையு
மண்ணந்தரு தண்டுழாய்ப் பிணந்தலைச் சுமந்த
முத்தலைச் சூலமும் வைத்தகைத் தலத்தோன்
வான்றோய் செக்கரிற் றோன்றுபிறை யெவனைப்
பொன்வரைக் குவடு தன்வயிற் றரிஞ்ச
மேனிவர் தோங்கிய வெஞ்சினக் கேழலின்

---

* ' வெள்ளியெயான் ளெருக்கு ' எனவும் பாடம்

கோடுகிடந் திமைக்கும் பீடுகெழு மார்போன்
பிறையுகிர் நோன்றாட் பொறியுடற் பேழ்வா
யுறுவலிப் புலியி னுரியினை யுடீஇத்
துத்திப் பைத்தலைச் சுடர்மணிச் சூட்டுக்
கடுவொடுங் கெயிற்றுநாண் கட்டிய வரையோன்
திருகுவெஞ் சினத்தி னுருகெழு தோற்றத்
தெறுழ்வலித் தடந்தோட் டறுகட் கூற்ற
மூழியி லெழுதரு முறுவளி சாய்த்த
நீனிறக் குன்றம் போன்மெனச் சாய
வொருசிறிது நிமிர்ந்த முருகுவிரி கமலத்
தலர்நலங் கவற்று மறைகழ லடியோன்
வெள்ளி மால்வரை துள்ளிநடந் தன்ன
கடுநடைச் செங்கண் விடைவல னுயர்த்தோன்
இமைய மீன்ற வமையுறழ் தடந்தோட்
கொவ்வைச் செவ்வாய்க் கொடியிடைக் குவிமுலைக்
கருங்குழற் பிறைநுதன் முருந்திள முறுவற்
றிங்கள் வாண்முகப் பொங்கர வல்குற்
றளிர்புரை மெல்லடி விளரியந் தீஞ்சொற்
கயல்புரை யரிக்கட் கருணையங் கருங்கட
லினிது வீற்றிருக்கு மிடமருங் குடையோன்
இன்னண மிருப்பினுந் தன்னிலை யெவர்க்கு
மிற்றெனக் கிளக்கும் பெற்றிய னல்லோன்
பெறுதலு மிழத்தலும் பிரிதலும் புணர்தலு
மூணு முறக்கமு மூக்கமு மடிமையும்
பிணியு மச்சமும் பிறபல குணனுந்
தோற்றமும் பருவமுந் தொலைவு மில்லோன்
சங்கர னமலன் றாணு சதாசிவன்
முழுதொருங் குணர்ந்தோன் முன்னோன் தலைவன்
தன்னருட் பெருமைக் குன்னரும் பிறவிக்
கழிபெருந் துன்பமுற் றழிதரு வோரை

யீர்த்தாட் கோட்ட லியற்கை யாக்கலி
* னுடலெனப் பெயரிய விடலருஞ் சிறைப்பட்
டாரஞர் மூன்று மாறு தருந்து
மென்னையு மாளத் தன்னுளத் தெண்ணி
மனமொழி மெய்களின் மருவரு மொருதான்
கருங்கட லுடுத்த விருங்கண்ஞா லத்துக்
குரவ னெனவோ ருருவொடு வந்து
பெரிதுட் கிடந்த வருள்வெளிப் படுத்து
நன்னர் நோக்கத் தென்னை நோக்கிய
வுலகம் விளக்கும் பலகதிர் பரப்பி
வாளர வென்னுமோர் தாளினிற் பூத்த
வங்கண்மா ஞாலப் பங்கய மலர்க்குப்
பொன்னிறக் கொட்டையாய்ப் பொலிந்துநின் றுயர்ந்த
விண்டொடு குடுமி மேருவலந் திரியு
மாழி யொன் றுடைய வேழ்பரி நெடுந்தேர்ப்
பரிதி வானவன் பரவையிற் றோன்றப்
பாயிரு டொலைத்துப் பகல்பிறந் தென்ன
வுள்ளிரு டிமித்தாங் கொளிசிறந் தன்றே

அவ்வழி

அளியனுந் தற்பெறக் † களிமிகுந் தினிதினே
தன்னை யெனக்குத் தானீந் தருள்புரிந்
தென்னிடத் தொழிவின் றிருந்தனன் மன்னோ
தன்னடைந் தவரை யின்னலம் பிறவிப்
பெருந்தளை யகற்றி யரும்பெற லின்பத்
தொருதனி வீட்டுல குய்த்த லானுந்
துஞ்சினோ ரென்பு தோய்த லானு

* 'கடலெனப் பெயரிய' எனவும் பாடம்
† 'களிசிறந் திசினே' எனவும் பாடம்

மூன்கெட வுடம்பு நோன்புழந் திமைய
மீன்றகொம் பிடத்துத் தோன்றத லானு
மொப்புமை யின்றி யுயர்ந்திமை யானுந்
தன்னை மானும் பன்னருஞ் சிறப்பிற்
கங்கையென் றுரைக்குங் கடவுளா றுடுத்த
பேசரும் பெருமைக் காசியம் பதியும்
கரைமிசை நின்ற விரிதலைத் தாழையின்
பூங்குலை சிதறித் தாங்கரும் பெருங்கா
யழனிறத் தாமரை யலரிதழ் சிதர்ந்து
பொன்னிறக் கொட்டை சின்னமுற் றிடவும்
சேயிதழ் மலரினும் பாசடை யிடத்து
மினிதிருந் தயர்வுயிர்த் திரைதேர் கமஞ்சூற்
சங்கின மலறுபு சைவலத் தொளிப்பவும்
*குரண்டமுங் கம்புளும் வெருண்ட நோக்கொடு
தலைமீ தெடுத்தெடுத் தலைநீர் மூழ்கவு
மஞ்சிறை யன்னமு மளியின் றெருகுதியும்
வெள்ளியம் புயலுங் கரிய மங்குலும்
பரந்தன வெழுந்து † கரந்தன விரியவும்
விரிகதிர் ஞாயிற்றின் வெயில்பெற வேட்டுக்
கோட்டருகு கிடந்த கூன்முது காமை
கைய் தெறிந்தென வொய்யென வீழ்ந்து
கீழ்நீர்ப் புகவும் கிளர்பெருந் திரையெழுந்
தோங்கிருங் கரைமிசைப் பாய்ந்தன புரளவுந்
துடுமென வீழ்தரக் கடுவிசை வாள்புரை
வாளை † பாயுந் தாளதா மரைத்தடத்
தாழ்நர் வீழ்த்த வயிரொளி மணிப்பூ
ணீர்க்கீழ்ப் படர்ந்த நெடுந்துகிர்க் கொடியென

---

* 'குரண்டமுங் கம்புளும் வெருண்டுறு கொக்கொடு' எனவும் பாடம்.

† 'பரந்தனோ டிரியவும்' எனவும் பாடம்

நனிகிடந் திமைக்கும் பனிபடு நறுமலர்
மல்லலம் பசும்பொழிற் றில்லையம் பலமும்
கவையடி வெடிவாற் குவிமுலை மேதி
மனையுழைக் கன்றை நினைதொறுஞ் சொரிந்த
வெண்பா லருந்திய செங்கா லன்னந்
தாமரைத் தவிசின் மீமிசை யுறங்கும்
* கண்ணகன் கழனி விண்ணக டுரிஞ்சு
நொச்சிசூழ் கிடந்த கச்சிமா நகரமும்
தண்டளிர்க் கோட்டுப் பிண்டிமுதல் பெயர்த்து
வெறிகமழ் சந்தனச் செறிவுகெட முருக்கி
விண்புகு நெடுஞ்சினைச் சண்பகஞ் சாடிக்
காழுடை யகிற்றிரள் வீழ்தர நூக்கி
மங்குல்கண் படுக்குங் குங்குமஞ் சாய்த்து
மிளிர்மணி யருவிக் குளிர்புனன் முகந்து
தூம்புடை நெடுங்கையிற் றாய்விளை யாடி
மீர்ங்கவுட் புகர்முகக் கூர்ங்கோட் டிறற்கால்
வெஞ்சினக் குஞ்சர மஞ்சுவரு நெஞ்சொடு
பசுந்தழை பொதுளிய விசும்புற நிமிர்ந்து
வாரியுண் டெழுதரு மழையொடு முரணும்
புதுவேய்ப் பொதும்பரிற் கதுமென வொளிக்க
வடங்கருஞ் சினத்து முடங்குளை நோன்றாட்
பெருவலி யரிமா னுருமென வதிர்க்கு
மணிகிள ரடுக்கத் தருணையங் கிரியும்
மணிவரன் றருவிவீழ் மல்லிகார்ச் சுனமும்
சோதி மாமரஞ் சுடுதழற் பிழம்பென்
றிளமட மந்தி யேறா தகலுந்
திருக்கா ளத்தியா ழுருக்கிளர் பொருப்பும்
† மீன்கணத் தகவயின் விளங்குவெண் டிங்கள்

* 'கண்ணகன் கழனியொடு விண்ணக டுரிஞ்சு' எனவும் பாடம்
† 'மீனிடத்தலையின்' எனவும் பாடம்

ஞெழுகொளி ரித்திலக் குழுவினுள் வலம்புரிச்
† சங்குகிடந் துறங்கும் பொங்குபுனற் பழனத்துக்
கரும்படு களம ரிரும்பு கைவிடுத்
தடிபெயர்த் தோடிக் குடவளை யிடறி
யெழுநீர்ப் பசுந்தாட் கழுநீர்க் குப்பையுள்
வண்டினம் வெரீஇயொலி கொண்டெழ வீழ
நெடுநெறிக் கரும்பி னெருக்கிடைக் கிடந்த
¶ கடுவரா லுகளுங் கம்பலை யவியா
வொருவாச் செல்வத் திருவா ரூரும்
ஆரங் குங்கும மகில்கரி மருப்புப்
பொன்மணி முதலிய பொருதிரைக் கையால்
§ விரிபொழி னிமிர்ந்தன் னிருகரை மருங்கினும்
வாழ்நர்க் குதவு மணிமுத் தாறெனும்
பெருநதி யுடுத்த திருமுது குன்றமும்
வரைபக வெறிந்து மாமுத றடிந்த
†† மணிநெடு வேலொடு வளர்பூங் குடுமி
முள்ளுண்ட நெடுந்தாட் புள்ளணி §§ கொடியோன்
வள்ளிபுரை மருங்குல் வள்ளிமா துக்குஞ்
சேயரி நெடுங்கட் டெய்வயா னைக்குங்
காணியென் விளங்கும் பூணணி மார்போ
னருணனி சுரக்கு மறுமுகத் தொருவன்
தன்னிக ரில்லாத் தனிமுதற் கடவுள்
‡ வெட்சிமலர் சூழ்ந்ததன் விரைமலர்த் திருவடி
யுள்ளுநர் தமக்குங் கள்ளவிழ் சேயிதழ்
முல்லியந் தாமரைச் செல்வனும் வணங்கும்

---

† 'சங்கு கிடந்துறப்' எனவும் பாடம்
¶ 'கடுவா ரருளும்' எனவும் பாடம்
§ 'விரிபொழில் நிமிர்ந்தன் விருகரை மருங்கினும்' எனவும் பாடம்
†† 'மணிநெடு வேற்கையும்' எனவும் பாடம்
§§ 'கொடியும்' எனவும் பாடம்
‡ 'நறைமலர்' எனவும் பாடம்

பெறலரு மரசு பெறவினி தளிப்போன்
றேங்கமழ் கடம்பின் றெரிய றுயல்வரூஉம்
பன்னிரு தடந்தோட் பண்ணவ னிருந்த
பனியிரு விசும்புதோய் பரங்குன் றிழிய
மணியருவி கொழித்த மணிகிடந் திமைக்குந்
திருமலி மருகிற் செந்தமிழ்க் கூடலும்
தமிழ்குடி யிருந்த தடவரைத் தோன்றி
* யிமிழ்திரை ஞாலத் தமிழ்தெனக் கிடந்த
தண்பொருநை யுடுத்த விண்பொரு நெடுமதி
னெல்லையு முதலிய பல்பெரும் பதிக
ளனைத்தினுங் கண்டோர்க் ககற்றரும்
† வினைத்தொடர் பகல வீற்றிருந் தெனவே.

---

விரிகட லாடைப் பெருநில மடந்தைக்
கரும்பெற லாரம் புரைந்தினி தொழுகும்
பொருதிரைப் பொன்னித் திருவரங் கத்துப்
புதுவெயி லெறிக்குங் கதிர்மணி சுமந்த
வாயிரஞ் சுடிகை மாயிரும் பாந்தட்
பள்ளி மீமிசை யொள்ளொளி மின்னெடு
கருமழை கிடந்த காட்சி போலப்
பிறைநுதற் றிருவோ டறிதுயி லமர்ந்த
புரிவளைத் தடக்கைப் பெரியோன் றானும்

(இதன் பொருள்) விரிகடல் ஆடைப் பெருநில மடந்தைக்குப் பெறலரும் ஆரம் புரைந்து இனிது ஒழுகும் பொருதிரைப் பொன்னித் திருவரங்கத்து = அகன்ற சமுத்திரமாகிய உடையை யுடுத்திய பெரிய பூமிதேவிக்கு எவராலும் அடைதற்கரிய நித்திலக் கோவையை யொத்து இழுமென்ற இனிய வோசையோ டொழுகா நிற்கும் கரையை மோதுகின்ற அலைகளையுடைய காவிரி யாற்றையுடைய

* 'யுமிழ்திரை' எனவும் பாடம்

† 'வினைத்தொட ரகல வீற்றிருந் தனனே' எனவும் பாடம்

திருவரங்கம் (ஸ்ரீரங்கம்) என்ற தலத்தின்கண்; புது வெயில் எறிக்கும் கதிர்மணி சுமந்த ஆயிரம் சுடிகை மாயிரும் பாந்தள் பள்ளி மீமிசை ஒள்ளொளி மின்னொடு கருமழை கிடந்த காட்சிபோல= என்றுந் தோன்றாத புதிய வொளியை வீசும் கிரணங்களையுடைய இரத்தினங்களைத் தாங்கிய ஆயிரம் சுடிகைகளையுடைய மிகப் பெரிய ஆதிசேடனாகிய படுக்கைமேல் அழகிய ஒளியினையுடைய மின்னலோடு கூடிய கரியமேகம் படிந்திருந்த தோற்றத்தை யொப்ப; பிறை நுதல் திருவோடு அறிதுயில் அமர்ந்த புரிவளைத் தடக்கைப் பெரியோன்றானும்=எண்ணாட் டிங்களையொத்த நெற்றியினை யுடைய இலக்குமியோடு அறிதுயிலை விரும்பிய உட்சுருளையுடைய சங்கை யணிந்த நீண்ட கையினையுடைய நெடியோனும்;

திருவரங்கத்துப், பள்ளிமீமிசை, அமர்ந்த, பெரியோன்றானும் எனக் கூட்டுக.

பெரியோனுக்கு மேகத்தையும், இலக்குமிக்கு மின்னலையும் உருவ வுவமையாகக் கொள்க. எண்ணாட்டிங்களை யொப்பது நுதலென்பது, "மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப், பசுவெண் டிங்க டோன்றி யாங்குக், கதுப்பயல் விளங்குஞ் சிறு நுதல்." (குறுந்—329செ.) என்னும் அடிகளாலறிக. ஞாயிறு, திங்கள், அங்கித் தேவன் ஆகிய தேவர் ஒளியினின்றும் வேறாயிருத்தலின் புதுவெயிலென்றார். திரு—திருவுடைய மகட்குப் பெயராயிற்று. எல்லாராலும் விரும்பப்பட்ட அழகு அவட்குண்டாகையாலே திருமகளென்று பெயராயிற்று என்பர் பேராசிரியர்.

'மாயிரும் பாந்தள்' என்பது "இடையுரி வடசொலினியம்பிய கொளாதவும்" (நன்—239) என்ற சூத்திரத்தான் உரிச்சொன் முன் யகர உடம்படு மெய் பெற்றது. மாயிரு, மீமிசை என்பன ஒருபொருட்பன்மொழிகள். பெரியோன்= திருமால். திருவரங்கம்= திருமால் திருப்பதிகளுள் ஒன்று. ஆரம்= முத்தாரம்; பூமாலையெனினுமாம். சுடிகை= உச்சிக்கொண்டை; நித்திலம்= முத்து.

10 புலர்தலை யுலகம் பலவும் பயந்து
தெய்வத் தாமரைத் திருத்தவி சிருக்கு
மசைவில் காட்சித் திசைமுகத் தொருவனும்

(இ - ள்) மலர்தலை யுலகம் பலவும் பயந்து = அகன்ற இடத்தை யுடைய வுலகங்கள் பலவற்றையும் தோற்றி; தெய்வத் தாமரைத்திருத் தவிசிருக்கும் அசைவில் காட்சித் திசைமுகத்து ஒருவனும் = கடவுட் டன்மை வாய்ந்த தாமரை மலராகிய அழகிய ஆதனத்தின்கண் வீற்றிருக்கும் சலன மில்லாத அறிவினையும் நான்கு முகத்தினையு முடைய பிரம்மனும் ;

பயந்து, இருக்கும், ஒருவன் எனக் கூட்டுக.

இலக்குமி, கலைமகள், பிரம்மன் முதலியோருக்கு இருக்கையாதலானும் பூக்களுட் சிறந்தமையானும், 'தெய்வத் தாமரை' என்றார். நான்முகன் இருக்கையாதலின் தவிசிற்குத் திரு என்ற அடை புணர்த்தார்; திருக்கோயில் என்றாற் போல. நான்கு முகத்தை யுடையவனாயினும் ஒருவனே யாவன் என்பார் 'திசைமுகத் தொருவன்' என்றார். பெரியோன்றானும், திசைமுகத்தொருவனும்—உயர்வு சிறப்பும்மைகள்; எண்ணும்மையுமாம். காட்சி = அறிவு.

ஈண்டித னடியுஞ் சேண்டொடு முடியுந்
தனித்தனிக் காண்குது மெனத்தமி லிசையா
விலங்கு பிறை மருப்பின் விலங்குரு வெடுத்து
நெடுநிலங் கிளையா வுடன்மிகத் தளர்ந்தும்
நிறைமதி நிறத்துப் பறவையுருப் பரித்து
வானகம் பறந்து மேனிநொந் திளைத்துங்
காண்டல் செல்லா தியாண்டு பலகழிய
மண்டழற் பிழம்பாய்ப் பண்டு நின்றோன்

(இ - ள்.) ஈண்டி தன் அடியும் சேண் தொடு முடியும் தனித் தனிக் காண்குது மெனத் தமில் இசையா = (யான் றலைவன் யான் றலைவனென்று தம்முண் மாறுபட்ட மாலும் பிரம்மனுமாகிய இருவரும்) நெருங்கித் தன் திருவடியையும், ஆகாயத்தைத் தீண்டுகின்ற திருமுடியையும் வேறுவேறாகத் தரிசிப்போமெனத் தங்களுள் சூளுற்று; இலங்குபிறை மருப்பின் விலங்கு உரு எடுத்து நெடுநிலம் கிளையா உடல் மிகத் தளர்ந்தும் = (அவர்களுள் திருமால்) விளங்குகின்ற பிறைபோன்ற கொம்பினை யுடையபன்றியாகிய மிருகவடிவைத் தாங்கிப் பெரிய பூமியை யகழ்ந்து அதனால் மேனி மிகச் சோர்வுற்றும்; நிறைமதி நிறத்துப் பறவை உருப் பரித்து வானகம் பறந்து மேனி

நொந் திளைத்தும் = (பிரம்மன்) கலைநிறைந்த திங்களைப் போன்ற வெண்ணிறத்தையுடைய அன்னப்புள்ளின் வடிவம் தாங்கி ஆகாயத்தின் கண் பறந்து சென்றதால் உடல் வருந்தி மெலிவுற்றும்; காண்டல் செல்லாது பல யாண்டு கழிய மண்டு அழல் பிழம்பாய்ப் பண்டு நின்றோன் = தரிசித்தல் முடியாது அனேக வருடங்கள் செல்லுமாறு செறிந்த தீ வடிவமாய் முற்காலத்து நின்றவனும்;

அடியும், முடியும், காண்குது மெனத், தமிலிசையா (இசைந்து), எடுத்து, தளர்ந்தும், பரித்து, நொந்திளைத்தும், யாண்டு பல கழிய, நின்றோன் எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

அடியைக் காண்டலும் விலங்கு உருவெடுத்துத் தளர்தலும் திருமாலின் செய்கையாகவும், முடியைக் காண்டலும் பறவை யுருப்பரித்து நொந்திளைத்தலும் பிரம்மன் செய்கையாகவும் கொள்க.

அடியும், முடியும் — எண்ணும்மை. காண்குதும் — உளப்பாட்டுத் தன்மைப் பன்மை முற்றுச் சொல். இசையா, இளையா என்பன செய்யா வென்னும் வாய்பாட்டு எச்சச் சொற்கள். தமில் — தொகுத்தல் விகாரம். பரித்தல் = சுமத்தல்; 'பரி பரி சுமத்தல் வேகம் பாது காத்திடல்' என்பது நிகண்டு.

பூசனை விடுத்த மாசுபுரி நெஞ்சத்து
வீயா வஞ்சத் தீயோ ரிருந்த
கடிகொண் மூ வெயிலும் பொடிபட நகைத்தோன்

(இ - ள்) பூசனை விடுத்த மாசுபுரி நெஞ்சத்து வீயா வஞ்சத் தீயோர் இருந்த கடி கொள் மூ எயிலும் பொடிபட நகைத்தோன் = தமது வழிபாட்டை மறந்த தீத்தொழிலை யாராயும் மனத்தையும் மாறாத வஞ்சனையையு முடைய கொடியோர் வாழ்ந்த காவலைக் கொண்ட மூன்று மதில்களும் சாம்பராகப் புன்முறுவல் கொண்டவனும்;

விடுத்த நெஞ்சம்; மாசுபுரி நெஞ்சம் என்க.

வீயா — ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். மூவெயிலும் — முற்றும்மை. புரிதல் என்பது ஆராய்தலென்னும்பொருட்டு; "அறம் புரிந்தன்ன செங்கோ னாட்டத்து" (புறம் — 35.) என்ற அடியின் உரையாலறிக. புரிதல் = மிகுதல், செய்தல் எனினுமாம். வீதல் என்பது மாறுதல் என்னும் பொருட்டு; 'வீயா விழுச்சீர்' (மணிமே—

20-10.) என்பதா லறிக. கடிகொண் மூவெயில் என்பதற்குக் காண்போர்க்கு அச்சம் செய்தலைத் தன்னிடத்தே கொண்ட மூவெயில் என்றும், இரும்பாலும் வெள்ளியாலும் பொன்னாலும் செய்த மூன்றாதலின் விளக்கங் கொண்ட மூவெயில் என்றுமுரைப்பினுமாம்.

பொன்னி னியன்றன மென்னறுங் கொன்றையும்
வெள்ளியிற் குயின்றன வெள்ளையெள் ளெருக்கு
மொழுகொளி மரகதத் தெழில்பெறச் செய்தன
வறுகும் வில்வச் செறிபசுந் தழையுந்
தும்பையு மத்தமும் வம்பவி ழாத்தியுங்
கொழிக்கு மிருந்திரைக் குளிர்புனற் பெருக்கிற்
சிறுவெள் ளோதிமந் திரிதர லென்ன
வெண்ணில வொழுக்குந் தண்மதிக் கொழுந்து
திரிதரச் சிறந்த செக்கரஞ் சடையோன்

(இ - ள்.) பொன்னின் இயன்றன மென்னறுங் கொன்றையும்=பொன்னால் செய்தாலொத்த மெல்லிய மணம் பொருந்திய கொன்றை மலரையும்; வெள்ளியில் குயின்றன வெள்ளை ஒள் எருக்கும்=வெள்ளியால் இழைத்தாலொத்த அழகிய வெள்ளெருக்க மலரையும்; ஒழுகு ஒளி மாகதத்து எழில்பெறச் செய்தன அறுகும் வில்வச் செறி பசுந் தழையும்=மிக்க ஒளியினையுடைய மாகதத்தால் அழகுறச் செய்தாலொத்த அறுகையும், வில்வத்தோடு பொருந்திய பச்சென்ற இலைகளையும்; தும்பையும் மத்தமும் வம்பு அவிழ் ஆத்தியும்=தும்பை மலரினையும், ஊமத்த மலரினையும், மணம்விரிந்த திருவாத்தி மலரினையுமுடைய; கொழிக்கும் இருந்திரைக்குளிர் புனல் பெருக்கில் சிறுவெள்ளோதிமம் திரிதர லென்ன=முத்துக்களை யொதுக்கும் பெரிய அலைகளையுடைய தண்ணிய நீரையுடைய கங்கை வெள்ளத்தில் சிறிய வெண்ணிறத்த அன்னம் அலையுந் தன்மையை யொப்ப; வெண் நிலவு ஒழுக்கும் தண்மதிக் கொழுந்து திரிதரச் சிறந்த செக்கர் அம் சடையோன்=வெள்ளிய கதிரைக் காலும் குளிர்ந்த திங்கட் பிறை இயங்காநிற்கச் சிறந்த சிவந்த அழகிய சடையை யுடையவனும்;

கொன்றையும், எருக்கும், அறுகும், தழையும், தும்பையும், மத்தமும், ஆத்தியும் (உடைய) சடையோன் எனக் கூட்டி முடிக்க.

திதரலென்ன திரிதரச்சிறந்த சடையோன் என இயையும்.

கொன்றை சிவபெருமானது அடையாளப் பூவாதலின் மூற் கூறினார். ஒரு கலையுடைமையான் தூண்மதிக் கொழுந் தென்றார்; இதனை, "தாரென்ன வோங்குஞ் சடைமுடிமேற் றனித்திங்கள் வைத்த, காரென்ன வாருங் கறைமிடற் றம்பலவன்." (திருக்கோ—56.) என்ற அடிகளானும் அவற்றின் உரையானுமறிக. கொன்றை, எருக்கு, வில்வம், தும்பை, மத்தம், ஆத்தி—பொருளாகு பெயர்கள்.

மத்தம்=ஊமத்தமலர். ஓதிமம்=அன்னம், வம்பு=மணம்.

மன்றலம் பொதியிற் றென்றலந் திருத்தேர்த்
திங்களங் கவிகை யைங்கணைக் கிழவனைப்
பற்றிய செந்தீ நெற்றிநாட் டத்தோன்

(இ-ள்) மன்றல் அம் பொதியில் தென்றலம் திருத்தேர்த் திங்கள் அம் கவிகை ஐங்கணைக் கிழவனைப் பற்றிய செந்தீ நாட்டத்து நெற்றியோன் = மணமுடைய அழகிய பொதிய மலையிலுண்டாகிய தென்றற் காற்றாகிய தேரினையும், சந்திரனாகிய குடையினையுமுடைய மன்மதனை எரித்த சிவந்த அக்கினியாகிய கண்ணை நெற்றியிடத்துப் பெற்றிருப்பவனும்;

ஒ நாட்டத்து நெற்றியோன் என விகுதிபிரித்துக் கூட்டப் பட்டது. நெற்றி நாட்டத்தோனெனக் கொண்டு நுதற்கண்ணை யுடையவனென்னினுமாம். சந்தனப் பொதியில் என ஆன்றோர்கள் சிறப்பித்துக் கூறலின் அம்மர மிகுதி பற்றி 'மன்றலம் பொதியில்' என்றார். பொதியில் என்பது எல்லாத் தேவர்களுக்கும் பொதுவாகிய இல் என்பர் இறையனாரகப் பொருளுரையாசிரியர். மன்மதன் ஐந்து பாணங்களைத் தனக்கு உரிமையாகப் பெற்றிருத்தலின் 'ஐங்கணைக் கிழவன்' என்றார். ஐங்கணையாவன:—தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்பனவாம்.

ஐங்கணை—பண்புத்தொகை. மன்றல்=மணம்.

அருடிரண் டெழுந்த வுருவமென் றுணர்த்தி
யிருள்குடி யிருந்த திருவமர் மிடற்றோன்

(இ-ள்.) அருள் திரண்டு எழுந்த உருவம் என்று உணர்த்தி இருள் குடியிருந்த திரு அமர் மிடற்றோன் = அருளெல்லாம் ஒருங்கு தோன்றிய திருவுருவம் இஃதாமென்று மக்கட்கு அறிவுறுத்தி

நஞ்சு சேர்ந்து தனக்கு இடமாகக் கொண்டிருந்த அழகு பொருந்திய கண்டத்தை யுடையவனும்;

உணர்த்தி, இருந்த, மிடற்றோன் என்க.

அருளாவது தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா வுயிர்கண் மேலும் செல்வதாகிய கருணை யென்பர் ஆசிரியர் பரிமேலழகர். நஞ்சினது கறுப்பும் ஓர் அழகு செய்து விளங்கலின் "திருவமர் மிடற்றோன்" என்றார். இதனை, 'கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை, மறைநவி லந்தணர் நுவலவும் படுமே' (புறம்—கடவுள் வாழ்த்து) என்ற அடிகளாலும், 'நஞ்சினது கறுப்பு திருமிடற்றை அழகு செய்தலும் செய்தது; அக் கறுப்பு, தான் மறுவாயும் வானோரை உய்யக் கொண்டமையின், வேதத்தைப் பயிலும் அந்தணராற் புகழவும்படும்' என்ற அவற்றின் உரையானும் நன்கறியலாம். அருளால் திரண்டெழுந்த திருவுருவம் எனினுமாம். நஞ்சு அவன் அருளை யுணர்த்துங் குறியா மென்பதனை, 'அருள்காட்டுங் கறைக்கண்டனே' (நிரஞ்ச - 9) என்பதானுமறிக.

இருள்—பண்பாகு பெயர்.

> ஏனையோர்க் கிறைமை யின்மை காட்டி
> முடங்குளை மடங்கல் முகனடுக் கோத்த
> 40. வெண்டலை மாலை கண்டவர் வெருவத்
> தண்டாது கிடக்குந் திண்டோட் பொருப்பினன்

(இ - ள்.) ஏனையோர்க்கு இறைமை இன்மை காட்டி முடங்கு உளை மடங்கல் முகம் நடுக் கோத்த வெண்தலை மாலை கண்டவர் வெருவத்தண்டாது கிடக்கும் திண்தோள் பொருப்பினன் = மற்றவர்களுக்குத் தலைமையாந்தன்மை இல்லாதிருத்தலை மக்கட்குத் தெரிவித்து வளைந்த புறமயிரினையுடைய சிங்கத்தின் தலையை நடுவே தொடுத்த வெள்ளிய தலையாலாகிய மாலை பார்ப்போர்க்கு அச்சமுற நீங்காதிருக்கும் வலிய புயமாகிய மலையினை யுடையவனும்;

மாலை, காட்டி, கிடக்கும், பொருப்பினன் என்க.

ஏனையோர் = திருமால் முதலியோராவர். தண்டாமை என்பது நீங்காமை யென்னும் பொருட்டு, 'துணிநீர் மகன்றிலிற் றண்டாது காமத் துறை படியும்' (தணிகை—களவுப்படலம் 72 செ.) 'பிரிவரிதாகிய தண்டாக் காமமொடு' (குறுந் - 57) என்பனவற்றானு மறிக.

அண்டப் பித்திகை விண்டிட வதிர்க்குந்
தீவாய்ப் பிணையும் பூவாய்க் கணிச்சியு
மன்ன முயர்த்தோன் சென்னிக் கடிஞையு
மணந்தரு தண்டுழாய்ப் பிணந்தலைச் சுமந்த
முத்தலைச் சூலமும் வைத்தகைத் தலத்தோன்

(இ-ள்.) அண்டப் பித்திகை விண்டிட அதிர்க்கும் தீவாய்ப் பிணையும்=பூமியின் மேற் பாகம் பிளவுபட அதிர்த்தலைச் செய்கின்ற தீயைக் காலும் வாயினையுடைய மானையும்; பூவாய்க் கணிச்சியும்= பொலிவுபெற்ற மழுவாயுதத்தையும்; அன்னம் உயர்த்தோன் சென்னிக் கடிஞையும் = அன்னம் எழுதிய கொடியைத் தூக்கிய பிரம்மனது தலையோடாகிய கலத்தையும்; மணம் தரு தண் துழாய்ப் பிணம் தலைச் சுமந்த முத்தலைச் சூலமும் வைத்த கைத்தலத் தோன்= வாசனை வீசுகின்ற குளிர்ந்த துளசிமாலையினை யணிந்த பிணத்தை நுனியிற்றூங்கிய திரிசூலத்தையும் பெற்றுள்ள (நான்கு) திருக்கரங் களை யுடையவனும்;

பிணையும், கணிச்சியும், கடிஞையும், சூலமும், வைத்த கைத்தலத் தோன் என்க.

நான்கு திருக்கரங்களும் முறையே மானும், மழுவும், கபாலமும், சூலமும் பெற்றிருத்தலைக் கூறினார். தண்டுழாய்ப் பிணமென்றது திருமால் உடலை. முத்தலைச் சூலம்=மூன்று இலைவடிவாயுள்ள ஆயுதம்; இதனை 'இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தினனை' (சுந்தரர் தேவாரம்) என்பதாலறிக.

கடிஞை=உண்கலம். அன்னம்=அன்னக்கொடி; ஆகு பெயர்.

வான்றோய் செக்கரிற் றோன்றுபிறை யென்னப்
பொன்வரைக் குவடு தன்வயிற் றுரிஞ்ச
மேனிவந் தோங்கிய வெஞ்சினக் கேழலின்
கோடுகிடந் திமைக்கும் பீடுகெழு மார்போன்

(இ-ள்.) வான் தோய் செக்கரில் தோன்று பிறை யென்ன= ஆகாயத்திற் படிந்த செவ்வானத்தில் காணப்படும் இளமதிபோல; பொன்வரைக் குவடு தன் வயிற்று உரிஞ்ச மேல் நிவந்து ஓங்கிய வெஞ்சினக் கேழலின் கோடு கிடந்து இமைக்கும் பீடு கெழு மார்

போன் = மேரு மலையின் சிகரம் தன்து வயிற்றின்கண் மோதும்படி மேலே வளர்ந்து சென்ற வெவ்விய கோபத்தையுடைய பன்றியின் கொம்பு கிடந்து விளங்கும் பெருமை பொருந்திய மார்பினையுடையவனும் ;

பிறையென்ன, கோடு இமைக்கும், மார்போன் என்க.
உரிஞ்ச, ஓங்கிய, கேழல் என இயையும்.

மார்பிற்குச் செக்கரை வண்ணவுவமமாகவும், கோட்டிற்குப் பிறையை வண்ணத்தோடு வடிவுபற்றிய வுவமமாகவுங் கொள்க. "செவ்வா னன்ன மேனி யவ்வா, னிலங்கு பிறை யன்ன விலங்கு வாள்வையெயிறு" (அகநா—கடவுள்வாழ்த்து.) என்னுமடிகள் ஈண்டு ஒப்பிடத்தக்கன. கேழல் — திருமாலாகிய கேழல். சிவபெருமான் திருமேனி செந்நிறத்த தென்பது, 'அந்தியின் வாயெழில்அம்பலத் தெம்பரன்' (திருக்கோ-69.) 'பவள நிறவரை மேனியன்' (திருக்கோ-260.) என்பனவற்றாலறிக.

செக்கரில் என்பது ஏழாவதன் பொருட்கண் வந்த இல்.

பிறையுகிர் நோன்றாட் பொறியுடற் பேழ்வா
யுறுவலிப் புலியி னுரியிடை யுடீஇத்
துத்திப் பைத்தலைச் சுடர்மணிச் சூட்டுக்
கடுவொடுங் கெயிற்றுநாண் கட்டிய வரையோன்'

(இ - ள்.) பிறை உகிர் நோன்தாள் பொறி உடல் பேழ்வாய் உறுவலிப் புலியின் உரி இடை உடீஇ = இளமதி போன்ற நகங்களையும், வலிய அடிகளையும், புள்ளிகளையுடைய உடலையும், பெரிய வாயையும், மிக்க ஆண்மையையு முடைய புலியின் றோலை இடையிற் கட்டி ; துத்திப் பைத்தலைச் சுடர்மணிச் சூட்டுக் கடு ஒடுங்கு எயிற்று நாண் கட்டிய அரையோன் = பொறிகள் பொருந்திய படத்தை யுடைய தலையின்கண் ஒளிபொருந்திய இரத்தினத்தையுடைய உச்சியையும் நஞ்சு உறைக்குள்ளே கிடந்த பற்களையுமுடைய பாம்பாகிய கச்சையை இறுகக் கட்டிய இடையினையுடையவனும் ;

உடீஇ, கட்டிய அரையோன் என்க.

உகிர் நோன்றாள் என்பதற்கு உகிரினையுடைய நோன்றாள் எனினுமாம். புலியும், பாம்பும் தாருகாவன ரிஷிகளாற் செலுத்தப் பட்டவை. 'நாணதாக வோர் நாகங் கொண்டரைக் கார்ப்பரோ'

(சுந்தரர் தேவாரம்) என்பதும், 'உடுத்தணி வாளரவன் = கச்சாகவும் உடுத்து அணியாகவு மணிந்த வாளரவன்' (திருக்கோ — 352.) என்றும், 'புற்றில வாளரவன் = வேள்வித்தீயிற் பிறந்து திருமேனிக்கண் வாழ்தலாற் புற்றையுடைய வல்லாத அரவு என்றுரைப்பினுமமையும்' (திருக்கோ—97.) என்றும் வரும் பேராசிரியருரையும் ஈண்டறியத் தக்கன.

எண்ணும்மைகள் தொக்கன. உறூஇ - சொல்லிசை யளபெடை. உறு என்பது மிகுதியென்னும் பொருட்டு; 'உறுதவ நனியென வரூஉம் மூன்றும், மிகுதி செய்யும் பொருள வென்ப' என்னும் தொல்காப்பிய சூத்திரத்தாலறிக. பை = பாம்பின்படம். துத்தி = படப்பொறி. நாண் = கச்சை (உதர பந்தனம்). எயிறு காளி, காளாத்திரி, யமன், யமதூதி என நான்காம்.

திருகுவெஞ் சினத்தி னுருகெழு தோற்றத்
தெறுழ்வலித் தடந்தோட் டறுகட் கூற்ற
மூழியி லெழுதரு முறுவளி சாய்த்த
நீனிறக் குன்றம் போன்மெனச் சாய
வொருசிறிது நிமிர்ந்த முருகுவிரி கமலத்
தலர்நலங் கவற்று மறைகழ லடியோன்

(இ - ள்.) திருகு வெம் சினத்தின் உரு கெழு தோற்றத்து எறுழ் வலித் தடந்தோள் தறுகண் கூற்றம் = மாறுபட்ட வெவ்விய கோபத்தினையுடைய உட்குதல் பொருந்திய காட்சியினையும், மிக்க வலிய பெரிய தோள்களையும், அஞ்சாமையையுமுடைய இயமன்; ஊழியில் எழுதரும் உறுவளி சாய்த்த நீல் நிறக் குன்றம் போன்மெனச் சாய = கடைக்காலத்திற் றோன்றும் பெருங்காற்றால் வீழ்த்தப்பட்ட நீல நிறத்தையுடைய மலையை யொப்ப வீழ; ஒரு சிறிது நிமிர்ந்த முருகுவிரி கமலத்து அலர் நலம் கவற்றும் அறை கழல் அடியோன் = (தன்னையடைந்த அந்தணச்சிறுவன் பொருட்டு) இலேசாகத் தூக்கிய தேன் அவிழ்ந்த தாமரை மலரின் அழகைக் கெடுக்கும் ஒலிக்கின்ற வீரக் கழலணிந்த திருவடியை யுடையவனும்;

கூற்றம், போன்மெனச்சாய, நிமிர்ந்த, அடியோனென்க.

எறுழ், வலி என்பன ஒரு பொருட்கிளவியாய் மிகுதி குறித்து நின்றன; 'கடுத்தணி காமர்' (திருக்கோ—352.) என்றாற் போல.

எறுழ் = வலி; 'எறுழ் வலியாகும்' (தொல்—870.) என்பதா லறிக. உரு என்பது உட்குதல் என்னும் பொருட்டு; 'உருவுட்காகும்' (தொல் - 874.)என்பதா லறிக. (உட்கு= அச்சம்.) தட வென்பது பெருமை யென்னும் பொருட்டு; 'தடவுங் கயவும் நளியும் பெருமை.' (தொல்-802.) என்பதாலறிக. தறுகண் என்பது அஞ்சத்தக்கன கண்ட விடத்து அஞ்சாமை என்பர் பேராசிரியர். ஊழிக்காலத்தில் காற்று மலைகளைச் சாய்த்தல், "விலங்கலைக் கால்விண்டு மேன்மேலிட விண்ணு மண்ணு முந்நீர்க், கலங்கலைச் சென்ற வன்றும்" (திருக்கோ—24.) என்பதாலும், "கொடுங்கால் குலவரை யேழேழ் பொழிலெழில் குன்று மன்று, நடுங்காதவன்" (திருக்கோ—31.) என்பதாலு மறிக. 'ஒரு சிறிது நிமிர்ந்த' என்றது வினையினது வலியின்மையைக் குறித்தவாறு. "காலன் புகுந்தவியக் கழல் வைத்து" (திருக்கோ—286.) என்பதும், "வெருவரும் கூற்றம் வீழ்தரச் சிறிது, விரனிமிர்ந் தன்று நின் விரைமலர்த் திருவடி." (சீகாள — பொன்முகரி) என்பதும் ஈண்டு அறியத்தக்கன. கழல் = வீரக் கழல்; 'ஆடவர் கொடை வீரத்தா லணிவது கழலென் றுமே' என்பது நிகண்டு.

நீல்—கடைக்குறை. அறைகழல், விரிகமலம்—வினைத்தொகை. குன்றம்—அம் சாரியை பெற்றது. போன்ம்—மகரக் குறுக்கம். கூற்றம்—சொல்லால் அஃறிணை.

வெள்ளி மால்வரை துள்ளிநடந் தன்ன
கடுநடைச் செங்கண் விடைவல னுயர்த்தோன்

(இ - ள்.) மால் வெள்ளிவரை துள்ளி நடந்தன்ன = பெரிய வெள்ளிமலை குதித்துச் சென்றா லொத்த; கடுநடைச் செங்கண் விடை வலன் உயர்த்தோன் = மிக்க செலவோடு கூடிய சிவந்த கண்ணையுடைய நந்தி வடிவமைப்பட்ட கொடியை வெற்றிக் குறியாக உயர்த்திக் கட்டியவனும்;

'வெள்ளிமால்வரை துள்ளி நடந்தன்ன' என்பது இல்பொருளுவமை. 'வெள்ளி மலையன்ன மால் விடையோன்' (திருக்கோ—128.) என்பது ஈண்டு ஒப்பிடத்தக்கது. விடை — ஆகுபெயர். வலன் = வெற்றி, வலதுகை என்றலுமாம். வரை = உயர்ந்த மலை.

இமையம் ஈன்ற வமையுறழ் தடந்தோட்
கொவ்வைச் செவ்வாய்க் கொடியிடைக் குவிமுலைக்

கருங்குழற் பிறைநுதன் முருந்திள முறுவற்
றிங்கள் வாண்முகப் பொங்கர வல்குற்
றளிர்புரை மெல்லடி விளரியந் தீஞ்சொற்
கயல்புரை யரிக்கட் கருணையங் கருங்கட
லினிது வீற்றிருக்கு மிடமருங் குடையோன்

(இ - ள்.) இமையம் ஈன்ற அமையுறழ் தடந்தோள் = மலையரையன் பெற்ற மூங்கிலை யொத்த பெரிய தோளினையும்; கொவ்வைச் செவ்வாய் = கொவ்வைக் கனிபோற் சிவந்த வாயினையும்; கொடி இடை = கொடி போல் நுடங்கும் இடையினையும்; குவிமுலை = குவிந்த தனத்தினையும்; கருங்குழல் = கரிதாகிய அளகத்தினையும்; பிறை நுதல் = எண்ணாட்டிங்களை யொத்த நெற்றியினையும்; முருந்து இளமுறுவல் = மயிலிறகினடியை யொத்த சிறிய பல்லினையும்; திங்கள் வாண்முகம் = கலை நிறைந்த சந்திரன் போன்ற முகத்தினையும்; பொங்கு அரவு அல்குல் = சீற்றத்தாலெழும் பாம்பின் படத்தை யொத்த நிதம்பத்தினையும்; தளிர் புரை மெல்லடி = மாந்தளிரை யொத்த மெத்தென்ற பாதத்தினையும்; விளரியம் தீஞ்சொல் = விளரிப் பண்ணையொத்துக் கேட்போர்க்கு இன்பம் பயக்கும் மொழியினையும்; கயல் புரை அரிக்கண் = கயல் மீனை யொத்த செவ்வரி பரந்த கண்ணினையுமுடைய; கருணையங் கருங்கடல் = அழகிய கருணையே வடிவமாகிய கருங்கடல் போன்ற நிறத்தினையுடைய உமையம்மையார்; இனிது வீற்றிருக்கும் இட மருங்கு உடையோன் = நலம்பெற அமர்ந்திருக்கும் இடப்பக்கத்தைப் பெற்றிருப்பவனும்;

இமையம் ஈன்ற, கருங்கடல், வீற்றிருக்கும் இடமருங்குடையோனென்க.

'அருள் திரண்டெழுந்த வுருவமென் றுணர்த்தி, இருள் குடியிருந்த திருவமர் மிடற்றோன்' (இஃது—36, 37) என்றதற்கேற்ப அம்மையாரையும் "கருணையங் கருங்கடல்' என்றார், ஒன்று பட்டிருத்தற் கொத்த பண்புடையாரென்ப தறிவிக்க. "பெண்ணுருப் படைத்த பேரரு ளிடப்பால் பெற்றிட வுகந்தளித் தவனே" (குறுங்கழி—4) என்பது ஈண்டறியத்தக்கது. விளரிப்பண் செவிக்கினிதாதல் பற்றி சொல்லிற்குவமையாய் வந்தது. இமையம்—ஆகுபெயர். விளரியம்—அம் சாரியை. அரா வென்பது 'குறியதன் கீழாக் குறுகலு மதனோ,

டுகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்' (நன்—172) என்னும் சூத்திரத்தான் அரவு என்ருயிற்று.

இன்னண மிருப்பினுந் தன்னிலை யெவர்க்கு
மிற்றெனக் கிளக்கும் பெற்றிய னல்லோன்

(இ - ள்) இன்னணம் இருப்பினும் = இவ்வாறு போராற்றலுடைய உறுப்புக்களை யுடையவனு யிருப்பினும்; தன் நிலை எவர்க்கும் இற்றெனக் கிளக்கும் பெற்றியன் அல்லோன் = தனது உண்மைத் தன்மையைத் (தவத்தானும் தியானத்தானும் எல்லாப் பொருளின் உண்மையை யறிந்தவர்களானும்) இத்தன்மைத்தென விதந்தோதப் படும் தன்மையற்றவனும்;

இன்னண மென்றது மேற் கூறிய வற்றைச் சுட்டி நின்றது. 'தன்னிலை யெவர்க்கு மிற்றெனக் கிளக்கும் பெற்றிய னல்லோன்' என்பது 'உணர்ந்தார்க் குணர்வரியோன்' (திருக்கோ—9) என்ற தன் உரையானும், "பட்டிருள் விழுங்க வலர்கதி ரவனும் பனிமதியோடுயிர்த் தொகையும், பார்புனல் சுடுதீ வளிவிசும் பென்னப் பட்டவைம் பூதமு மாகு, மெட்டுரு வடைந்து முருவமொன் றின்றி யிற்றென வுணர்வரும் பொருளே."(நெடுங்கழி—2) என்பதானும் அறியத் தக்கது.

எவர்க்கும்—முற்றும்மை. பெற்றி—தன்மை.

பெறுதலு மிழத்தலும் பிரிதலும் புணர்தலு
மூணு முறக்கமு மூக்கமு மடிமையும்
பிணியு மச்சமும் பிறபல குணனுந்
தோற்றமும் பருவமுந் தொலைவு மில்லோன்

(இ - ள்) பெறுதலும் = தன்னின் மிக்காரை வழிபட்டு ஒரு பொருளை அடைதலும்; இழத்தலும் = அங்ஙனம் பெற்ற பொருளை வினை வயத்தான் இழத்தலும்; பிரிதலும் = எல்லா வற்றிலும் பொருந்தியிருக்குந்தான் அவைகளினின்றும் விலகுதலும்; புணர்தலும் = யாவற்றையுங் கடந்து நின்றவன் ஒன்றின்கண் இயைந்திருத்தலும்; ஊணும் = உணவும்; உறக்கமும் = தூக்கமும்; ஊக்கமும் = *வினை செய்தற் கண் மனவெழுச்சியும்; மடிமையும் = † கருதிய வினை செய்

*பரிமேலழகருரை குறள். 382.
† திருக்குறள் 61. அதி—அவதாரிகை. பரிமேலழகர் உரை.

யுங்கால் சோம்புதலும் ; பிணியும்=நோயும் ; அச்சமும்=பிறவற்றாற் பயமுறுதலும் ; பிற பலகுணனும்=மற்றும் பலவாக மக்கட்குரிய பண்புகளும் ; தோற்றமும் = ஒன்றின்கண் தான் றோன்றுதலும் ; பருவமும்=மக்கட்குரிய இளமை முதுமையாகிய கால விகற்பமும் ; தொலைவும்=இறப்பும் ; இல்லோன் =(ஆகிய) இவைக ளில்லாதவ வனும் ;

உம்மைகள்—எண்ணும்மை.

சங்கர னமலன் றாணு சதாசிவன்
முழுதொருங் குணர்ந்தோன் முன்னோன் தலைவன்

(இ - ள்) சங்கரன் = தன்னைப் பரவும் அன்பர்களுக்குச் சுகத் தைச் செய்பவனும் ; அமலன்=இயல்பாகவே குற்றங்களினின்றும் நீங்கியவனும் ; தாணு = சலன மில்லாதவனும் ; சதாசிவன்=எவ் வுயிர்க்கும் எப்பொழுதும் நன்மையைச் செய்பவனும்; முழுது ஒருங்கு உணர்ந்தோன் = எல்லாப் பொருளையும் ஒருங்கே அறிந்தவனும்; முன்னோன்=உலகத் தோற்றத்திற்கு முன்னுள்ளோனும் (ஆகிய) ; தலைவன் = (திருமால் முதலிய யாவருக்கும்) இறைவனாயுள்ள சிவ பெருமான் ;

சங்கரன், அமலன், தாணு, சதாசிவன், முன்னோன், தலைவன் என்பன ஒரு பொருட் சொற்கள். முழுதொருங்குணர்த லென்பது சிவபெருமானுடைய எண்குணங்களிலொன்றாகிய முற்றுமுணர்தல் (சர்வஞ்ஞத்துவம்) என்பதாம். முழுது என்பது எல்லா மென்னும் பொருட்டு. இதனை ‘முழுதென் கிளவி எஞ்சாப் பொருட்டே.’ (தொல்—808) என்பதாலறிக.

தன்னருட் பெருமைக் குன்னரும் பிறவிக்
கழிபெருந் துன்பமுற் றழிதரு வோரை
யீர்த்தாட் கோட வியற்கை யாகலி
னூழ—லெனப் பெயரிய விடலருஞ் சிறைப்பட்
டாரஞர் ழுன்று மாணு தருந்து
மென்னையு மாளத் தன்னுளத் தெண்ணி
மனமொழி மெய்களின் மருவரு மொருதான்

கருங்கட லுடுத்த விருங்கண் ஞாலத்துக்
குரவ னெனவோ ருருவொடு வந்து
பெரிதுட் கிடந்த வருள்வெளிப் படுத்து
நன்னர் நோக்கத் தென்னை நோக்கிய
வுலகம் விளக்கும் பலகதிர் பரப்பி
வாளர வென்னுமோர் தாளினிற் பூத்த
வங்கண்மா ஞாலப் பங்கய மலர்க்குப்
பொன்னிறக் கொட்டையாய்ப் பொலிந்து நின்றுயர்ந்து
விண்டொடு குடுமி மேருவலந் திரியு
மாழியொன் றுடைய வேழ்பரி நெடுந்தேர்ப்
பரிதி வானவன் பரவையிற் றோன்றப்
பாயிரு டொலைத்துப் பகல்பிறந் தென்ன
வுள்ளிரு டுமித்தாங் கொளிசிறந் தன்றே

(இ - ள்) தன் அருள் பெருமைக்கு = தனது அருட் பெருக்கிற்கு ; உன்னரும் பிறவிக் கழிபெருந் துன்பமுற்று உழிதருவோரை = நினைத்தற்கரிய பிறப்பாகிய மிக்க இன்னலை யடைந்து வருந்துபவர்களை ; ஈர்த்து ஆட்கோடல் இயற்கையாகலின் = (தனது மேன்மை கருதாது வலியத்தாமே) இழுத்து அடிமையாகக் கொள்ளுதல் புதுமையின்றி இயல்பாகிய தன்மை யாதலின் ; உடலெனப் பெயரிய விடலரும் சிறைப்பட்டு ஆர் அஞர் மூன்றும் ஆனாது அருந்தும் என்னையும் ஆளத் தன்னுளத்து எண்ணி = உடலென்ற பெயரினையுடைய (தன்னுளடைந்தோரை) நீக்காத காவலறையுள் அடைந்து, நிறைந்த துன்பங்கள் மூன்றனையும் நீங்காது அனுபவிக்கும் அடியேனையும் ஒரு பொருளாக ஆட்கொள்ளத் தனது திருவுளத்திற் கருதி ; மனம் மொழி மெய்களில் மருவரும் ஒரு தான் கருங்கடல் உடுத்த இருங்கண் ஞாலத்துக் குரவன் என ஓர் உருவொடு வந்து = மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றாலும் பொருந்தற்கரிய ஒப்பற்ற தான் (சிவபெருமான்) பெரிய சமுத்திரமாகிய ஆடையைத் தரித்த பெரிய இடத்தைத் தன் கண்ணேயுடைய பூமியின் கண் குருதேவன் எனப் பெயரிய திருவுருவத்தோடெழுந்தருளி; பெரிது உட்கிடந்த அருள் வெளிப் படுத்து = மிகவும் அகத்தே பொருந்தியிருந்த திருவருளைக் காட்டுகின்ற ; நன்னர் நோக்கத்து என்னை நோக்கிய = (சஞ்சித வினையைப்

போக்கும்) நல்ல திருவுளக் கருத்தால் அடியேன் மீது திருக்கடைக் கண் சாத்தியருள ; உலகம் விளக்கும் பலகதிர் பரப்பி வாள் அரவென்னும் ஓர் தாளினில் பூத்த அம்கண் மா ஞாலம் பங்கய மலர்க்கு = புற விருள் நிறைந்த வுலகத்தை ஒளிபெறச் செய்வதற்கேதுவாகிய பல கிரணங்களைச் செலுத்தி, ஒளியையுடைய ஆதிசேடன் என்று கூறப்படும் ஒப்பற்ற நாளத்தில் மலர்ந்த அழகிய இடத்தையுடைய பெரிய பூமியாகிய தாமரைப் பூவிற்கு ; பொன் நிறக் கொட்டையாய்ப் பொலிந்து நின்று உயர்ந்த விண்தொடு குடுமி மேரு = பொன்னினது நிறத்தை நிறமாக வுடைய பொகுட்டாக விளங்கிச் சலனமின்றி உயர்ந்த ஆகாயத்தை மோதுகின்ற உச்சியையுடைய மேருமலையை ; வலம் திரியும் ஆழி ஒன்று உடைய எழ்பரி நெடுந்தேர்ப் பரிதி வானவன் பரவையில் தோன்ற = வலப்புறமாகச் சுற்றும் ஒருருளையையுடைய எழு குதிரைகளைப் பூட்டிய உயர்ந்த இரதத்தையுடைய பூத சூரியனாகிய தேவன் கடலில் உதயமாக; பாய் இருள் தொலைத்துப் பகல் பிறந்தென்ன உள் இருள் துமித்து ஆங்கு ஒளி சிறந்தன்று = (உலக முழுதும்) பரவிய புறவிருள் கெடுதலால் ஒளிதோன்றியதையொப்ப அகவிருள் (மாயை) கெட அப்பொழுதே ஞானம் மிகுந்தது.

தன்னருட், பெருமைக்கு, இயற்கையாகலின், ஆள, எண்ணி, ஞான், வந்து, படுத்து, நோக்கிய, ஒளிசிறந்தன்று என வினைமுடிபு செய்க.

பரப்பி, வலந்திரியும், வானவன், தோன்ற, பிறந்தென, சிறந்தன்று எனவும் ; பூத்த, மலர்க்கு, கொட்டையாய், உயர்ந்த, மேரு எனவும் இயைக்க.

ஆதிசேடன் தாளாகவும், பூமி பங்கய மலராகவும் மேரு கொட்டையாகவும் உருவகிக்கப்பட்டன. "விண்ணுயர்சம் புத்தீவி னடுவுநின்ற மேருவரை செங்கமலப் பொகுட்டுப்போல" (கந்த—அண்டகோசப்படலம் 29 செ.) என்பது ஈண்டு ஒப்பிடத்தக்கது. "பரிதி வானவன் பரவையிற் றோன்றப், பாயிருடொலைத்துப் பகல் பிறந்தென்ன" என்பது வினையுவமம். ஈண்டு ஞானசிரியர் தமக்குச் சக்ஷு தீக்ஷை புரிந்ததை ஆசிரியர் நயம்பட விளக்குமுறை போற்றிப் புகழற் குரியது. உடுத்த என்ற வினைக்கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப் பட்டது. அருள் மூன்றுவன :—ஆதியான்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தைவிகம் என்பனவாம். அவை முன்றயே சடத்தோடு

கூடிய சேதனம் வாயிலாக வருவதும், பஞ்ச பூதம் வாயிலாக வருவதும், ஒரு வாயிலானன்றித் தெய்வந்தானே காரணமாக வருவதுமாகிய துன்பங்கள். அநாதிமுத்த சித்துருவாகிய சிவம் தனது கைம்மாறில்லாத கருணையால் அநாதி பெத்த சித்துருவாகிய ஆன்மாக்களுய்யும் பொருட்டு மானைக் காட்டி மானைப் பிடிப்பதுபோல் அருளுருக் கொண்டா னென்பார் ‘ மனமொழி மெய்களில் மருவரு மொருதான் .........குரவ னெனவோ ருருவொடு வந்து ’ என்றார்.

பெருமைக்கு — நான்காவது தகுதிப்பொருள். இயற்கையாகலின் — ஐந்தாவது ஏதுப்பொருள். மூன்றும் — முற்றும்மை. என்னையும்—இழிவு சிறப்பும்மை. துமித்து என்னும் செய்தெனெச்சம் செயவெனச்சமாகத் திரிக்கப்பட்டது. அது காரணப் பொருட்டு. என்னை — உருபு மயக்கம். நோக்கிய — செய்யிய வென்னும் வாய்பாட்டெச்சம். செயவெ னெச்சமாகத் திரித்துப் பொருள் கொள்ளப் பட்டது. நன்னர் நோக்கம் என்றது நோக்கல் நோக்கம். அஃதாவது மனத்தான் நோக்குதல். இதனை ‘இரண்டன் மருங்கின்’ (தொல் — சொல்—89) என்ற சூத்திரத்தின் இளம்பூரணருரை யானறிக.

அவ்வழி
தன்னடைந் தவரை யின்னலம் பிறவிப்
பெருந்தளை யகற்றி யரும்பெற லின்பத்
தொருதனி வீட்டுல குய்த்த லானுந்
துஞ்சினோ ரென்பு தோய்த லானு
மூன்கெட வுடம்பு நோன்புழந் திமைய
மீன்றகொம் பிடத்துத் தோன்றுத லானு
மொப்புமை யின்றி யுயர்ந்தமை யானுந்
தன்னை மானும் பன்னருஞ் சிறப்பிற்
கங்கையென் றுரைக்குங் கடவுளா றுடுத்த
பேசரும் பெருமைக் காசியம் பதியும்

(இ-ள்) அவ்வழி=அக்காலத்து; தன் அடைந்தவரை இன்னலம் பிறவிப் பெருந்தளை அகற்றிப் பெறல் அரும் இன்பத்து ஒரு தனி வீட்டுலகு உய்த்தலானும்=தன்னிடத்து மூழ்குவோரைத் துன்பத்தைச் செய்யும் பிறப்பிற் கேதுவாய பெரிய பாசத்தைப் போக்கி அடைதற்யகரிய பேரின்பத்தைப் பயக்கும் ஒப்பற்றதாயும் ஒன்றாயு

முள்ள மோட்ச வுலகின்கண் சேர்த்தலானும்; துஞ்சினோர் என்பு தோய் தலானும் = இறந்தவர்களுடைய எலும்புகள் தன்னிடத்தே தோயப் பெற்றிருத்தலானும்; உடம்பு ஊன்கெட நோன்பு உழந்து இமையம் ஈன்ற கொம்பு இடத்துத் தோன்றுதலானும் = உடலின் தசை வற்றும்படி விரதங்களால் வருந்த மலையரையன் பெற்ற உமையம்மையார் திருக்கரத்தினின்றும் உற்பத்தி யாவதாலும்; ஒப்புமையின்றி உயர்ந்தமையானும் = தன்னோடு உவமிக்கத் தக்கவைகள் யாவுமில்லாமல் (எல்லா நதிகளினும்) தான் மேம்பட்டிருத்தலானும்; தன்னைமானும் பன்னருஞ் சிறப்பில் கங்கை என்றுரைக்கும் கடவுள் ஆறு உடுத்த பேசரும் பெருமைக் காசியம் பதியும் = தன்னை (சிவ பெருமானை) ஒத்திருக்கும் சொல்லுதற்கரிய கீர்த்தியால் கங்கையென்று பலரானும் புகழ்ந்துரைக்கப் படும் தெய்வ நதியைத் தன்னிடத்தே கொண்ட உரைத்தற்கரிய பெருமை வாய்ந்த காசியாகிய அழகிய திருத்தலமும்;

உய்த்தலானும், தோய்தலானும், தோன்றுதலானும், உயர்ந்தமையானும், தன்னைமானும், கடவுளாறுடுத்த காசியம் பதியு மென்க.

தன்னை யொத்தலாவது சிவபெருமான் தன்னை யணுகிய அன்பரைத் துன்பத்தைச் செய்யும் பிறவிக்கேதுவாகிய பெரிய பாசத்தை நீக்கி, யாவராலும் பெறுதற்கரிய பேரின்பத்தைப் பயக்கும் ஒப்பற்ற தாயும் ஒன்றுயுமுள்ள மோட்ச வுலகின்கண் சேர்த்தல் போற் கங்கையும் தன்கண் மூழ்குவோரை வீட்டுலகின்கண் சேர்த்தலானும், சிவபெருமான் பிரம்ம விட்டுணுக் களுடைய முழுவெலும்புகள் தோயப் பெற்றிருத்தல் போற் கங்கையும் இறந்தவர்களுடைய எலும்புகள் தோயப் பெற்றிருத்தலானும், உடலின் தசைவற்ற நோன்புழந்து மலையரையன் பெற்ற உமையம்மையார் தனது இடப்பாகத்தில் விளங்கப் பெற்றிருத்தல் போற் கங்கையும் உமையம்மையாருடைய கரத்திடத்தினின்றும் உதித்தலானும், தனக்கு எவரும் ஒத்தலின்றி, முதற் கடவுளாயுயர்வு பெற்றிருத்தல்போற் கங்கையும் ஒப்பின்றி எல்லா நதிகளைக் காட்டிலும் உயர்வற்று விளங்குதலானுமாம்.

அவ்வழி—தனிச்சொல். இமையம் என்றதற்கேற்ப உமையம்மையாரைக் கொம்பென்றார்; மலைக்கண் உண்டாதல் அதுவாதலின். கங்கை உமையம்மையார் திருக் கரத்தினின்றுந் தோன்றிய தென்பது புராணவரலாறு. நோன்புழத் தலாவது உண்டி சுருக்கலும், கோடைக்

கண்வெயினிலே நிற்றலும், மாரியினும் பனியினும் நீர் நிலே நிற்றலும் முதலிய செயல்களாம்.

இன்னலம்—அம், அல்வழிச்சாரியை. துஞ்சினோர்—மங்கலச் சொல். இமையம், கொம்பு — ஆகுபெயர்கள். வீட்டுலகு — பண்புத் தொகை. அடைந்தவர் = அன்பர், மூழ்குவோர். துஞ்சினோர் = இறந்த பிரம்ம விட்டுணுக்கள், இறந்த மக்கள். இடம் = இடப்பாகம், காமாகிய இடம், உழத்தல் = வருந்தல். என்பு = எலும்பு. காசி = முத்தித்தலங்களேழனுளொன்று. கடவுளாறு = கடவுளாற் றரப்பட்ட ஆறு என்றலுமாம்.

கரைமிசை நின்ற விரிதலேத் தாழையின்
பூங்குலே சிதறித் தாங்கரும் பெருங்கா
யழனிறத் தாமரை யலரிதழ் சிதர்ந்து
பொன்னிறக் கொட்டை சின்னமுற் றிடவும்

(இ - ள்.) கரை மிசை நின்ற விரிதலேத் தாழையின் = குளத்தின் கரை மேல் நிலவிய பரந்த வுச்சியையுடைய தென்னேயினது; பூங்குலே சிதறித் தாங்கரும் பெருங்காய் = அழகிய குலேயானது சிதறுண்டு சுமத்தற்குப் பாரமாகிய பெரிய தெங்கங்காய்; அழல் நிறத் தாமரை அலர் இதழ் சிதர்ந்து = தீயினது நிறத்தை நிறமாகக் கொண்ட தாமரை மலரினது இதழ்கள் கிழிந்து; பொன் நிறக் கொட்டை சின்ன முற்றிடவும் = பொன்னினது நிறத்தை யுடைய பொகுட்டானது கெடவும்;

115 சேயிதழ் மலரினும் பாசடை யிடத்து
மினிதிருந் தயர்வுயிர்த் திரைதேர் கமஞ்சூற்
சங்கின மலறுபு சைவலத் தொளிப்பவும்

(இ - ள்) சேயிதழ் மலரினும் = சிவந்த இதழ்களேயுடைய பூக்களிலும்; பாசடை இடத்தும் = பசிய இலேகளிடத்தும்; இனிதிருந்து அயர் வுயிர்த்து இரைதேர் கமஞ்சூல் சங்கினம் அலறுபு சைவலத்து ஒளிப்பவும் = வீற்றிருந்து சோர்வு நீங்கி உணவை ஆராயும் நிறைந்த கருப்பத்தையுடைய சங்கினம் ஒலிசெய்து ஆங்குள்ள கொடிப் பாசியின்கண்ணே மறையவும்;

குரண்டமூம் கம்புளும் வெருண்ட நோக்கொடு
தலேயீ தெடுத்தெடுத்து அலேநீர் மூழ்கவும்

(இ - ள்) குரண்டமும் கம்புளும்=கொக்கும் சம்பங்கோழியும்; வெருண்ட நோக்கொடு=அச்சுற்ற பார்வையோடு; தலை மீது எடுத்து எடுத்து அலைநீர் மூழ்கவும்=தலையை மேலே தூக்கித் தூக்கிப் பார்த்து, அலைகளையுடைய நீரின்கண்ணே மூழ்கவும்;

அஞ்சிறை யன்னமும் அளியின் றொகுதியும்
வெள்ளியம் புயலுங் கரிய மங்குலும்
பரந்தன வெழுந்து கரந்தன விரியவும்

(இ - ள்) அம் சிறை அன்னமும்=அழகிய இறகுகளையுடைய அன்னப்பறவையும்; அளியின் றொகுதியும்=வண்டின் கூட்டமும்; வெள்ளியம் புயலும் = வெண்ணிறத்தை யுடைய அழகிய மேகமும்; கரிய மங்குலும்=கரிய நிறத்தையுடைய மேகமும் (ஆகிய இரண்டும்); பரந்தன எழுந்து கரந்தன இரியவும் = (ஆகாயத்தில்) படர்ந்தாற் போலப் பறந்து மறைந்தோடவும்;

விரிகதிர் ஞாயிற்றின் வெயில்பெற வேட்டுக்
கோட்டருகு கிடந்த கூன்முது காமை
கைய தெறிந்தென வொய்யென வீழ்ந்து
கீழ்நீர்ப் புகவும்

(இ - ள்) விரி கதிர் ஞாயிற்றின்=பரந்த வொளியினையுடைய சூரியனது; வெயில் பெற வேட்டு = வெயில் காய்தலை விரும்பி; கோட்டு அருகு கிடந்த கூன் முதுகு ஆமை = கரையின் பக்கத்தே தங்கிய வளைந்த முதுகினையுடைய ஆமையானது; கையது எறிந்தென ஒய்யென வீழ்ந்து நீர்க்கீழ்ப் புகவும்=கையோடு கையடித்தாற் போல விரைவாகக் குதித்து நீரினுள்ளே ஒளிக்கவும்;

..............................கிளர்பெருந் திரையெழுந்
தோங்கிருங் கரைமிசைப் பாய்ந்தன புரளவுந்
துடுமென வீழ்தரக் கடுவிசை வாள்புரை
வாளை பாயுந் தாளதா மரைத்தடத்
தாடுநர் வீழ்த்த வயிரொளி மணிப்பூ
ணீர்க்கீழ்ப் படர்ந்த நெடுந்துகிர்க் கொடியென
நனிகிடந் திமைக்கும் பனிபடு நறுமலர்
மல்லலம் பசும்பொழிற் றில்லையம் பலமும்

(இ - ள்) இளர் பெருந்திரை எழுந்து=எழுகின்ற பெரிய அலை தோன்றி; ஓங்கு இருங்கரை மிசை=உயர்ச்சியும் விசாலமுமுடைய் கரைமேல்; பாய்ந்தன புரளவும் = பறந்து மடங்கவும்; துடுமென வீ ழ் த ர = துடும் என்ற ஒலியுண்டாகும்படி (பெருங்காய்—112) வீழ; கடுவிசை வ ா ள் பு ை ர வாளைபாயும்=மிக்க விரைவோடு வாளையொத்த வாளைமீன்கள் தாவுகின்ற; தாள தாமரைத் தடத்து= காளத்தையுடைய தாமரை மலரினையுடைய குளத்தின்கண்; ஆடுநர் வீழ்த்த அவிர் ஒளி மணிப்பூண்=நீர் விளையாடுவோரால்கீழே போகடப்பட்ட விளங்குகின்ற ஒளியினையுடைய மணிகள் ப தி த் த அணிகலம்; நீர்க்கீழ்ப் படர்ந்த நெடுந் துகிர்க் கொடியென=நீரினது உள்ளே பரவிய நீண்ட பவளக்கொடியினை யொப்ப; நனி கிடந்து இமைக்கும் பனிபடு நறுமலர் மல்லல் அம் பசும் பொழில் தில்லை அம்பலமும்=மிகுதியாகக் காணப்பட்டு வி ள ங் கு ம் தண்மைமிக்க மணமுடைய பூக்களைத் தன்னிடத்தே கொண்ட வளம்பொருந்திய அழகிய பசிய சோலைகள்சூழ்ந்த தில்லைக்கண்ணுள்ள சிற்றம்பலமும்;

சின்ன முற்றிடவும், ஒளிப்பவும், மூழ்கவும், இரியவும், புகவும், புரளவும், பெருங்காய் வீழ்தர, வாளைபாயும், தடத்து, மணிப்பூண், கொடியென, இமைக்கும், பொழிற்றில்லை யம்பலமும் எனக் கூட்டி முடிக்க.

அன்னத்தை வெண்மேகத்திற்கும், அளியின் கூட்டத்தைக் கருமேகத்திற்கும் புனைபொருளாகக் கொள்க. 'கடுவிசை வாள்புரை' என்பதற்கு மிக்க விரைவோடோச்சும் வாளையொத்த என்றுரைப்பினுமாம். " வலிநடத்திய வாளென வாளைகள்பாய " (கம்ப-பம்பை-22) என்பது ஈண்டு ஒப்பிடத்தக்கது. அலைநீர் என்பதை வினைத்தொகையாக்கிக் கரையை அலைக்கும் நீர் என்றுரைப்பினுமாம்.

விரிதலை—வினைத்தொகை. அலறுபு—செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். பறந்தன, கரந்தன என்பவை வினையெச்சமுற்றுக்கள். இதனை ' முன்னத்தி னுணரும் ' (தொல் - சொல் 63.) என்னும் சூத்திரத்து நச்சினார்க்கினிய ருரையானறிக. ஓய் — விரைவின் பொருளைத் தருவதோரிடைச்சொல். கீழ்நீர் — நீர்க்கீழ் என்னும் இலக்கணத்தோடு பொருந்திய மரூஉ வென்பர் நச்சினார்க்கினியர். முன்பின் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை யென்பர் பரிமேலழகர். துடும்—ஒலிக்குறிப்பு. நீர்க்கீழ்—

ஆறும் வேற்றுமைத் தொகை ஒன்றியற் கிழமைக்கண் வந்தது. எடுத் தெடுத்து—விரைவின்கண் வந்த அடுக்குத் தொடர்.

தாழை=தென்னை. அயர்வு = சோர்வு. கமம் = நிறைவு; 'கம நிறைந் தியலும்' (தொல்-837.) என்பதாலறிக. அடை=இலை. வெரு ளுதல் = வெருவுதல்; அஃது அஞ்சவேண்டாதன கண்டவழியும் கடிதிற் பிறந்து மாறுவதோர் வெறி என்பர் பேராசிரியர். நனி என் பது மிகுதி யென்னும் பொருட்டு; 'உறுதவ நனியென வரூஉம் மூன்றும், மிகுதி செய்யும் பொருள வென்ப.' (தொல்—783.) என் பதாலறிக. பனிபடு=தண்மை மிக்க; படு என்பது மிகுதிப்பொருட்டு. 'பல்வகை யசாரும் படுதுய ருறூஉம்' (மணிமே—6—180.) என்ப தாலறிக. கோடு = கரை. கிளர்தல் = எழுதல்; 'கால் கிளர்ந்தன்ன வேழம்' (திருமுருகு—82.) என்பதன் உரையானறிக.

கவையடி வெடிவால் குவிமுலை மேதி
மனையுழைக் கன்றை நினைதொறுஞ் சொரிந்த
வெண்பா லருந்திய செங்கா லன்னந்
தாமரைத் தவிசின் மீமிசை யுறங்குங்
கண்ணகன் கழனி விண்ணக டுரிஞ்சு
நொச்சிசூழ் கிடந்த கச்சிமா நகரமும்

(இ-ள்) கவை அடி வெடிவால் குவிமுலை மேதி=பிளவுபட்ட அடியினையும் பல்காலும் வீசுகின்ற வாலினையும் குவிந்த மடியினையு முடைய எருமையானது; மனை யுழைக் கன்றை நினை தொறும் சொரிந்த வெண்பால் அருந்திய செங்கால் அன்னம் = வீட்டின்கண் ணுள்ள இளங்கன்றை எண்ணுந் தோறும் பொறுத்தற் கரிதாய்ச் சொரிந்த வெண்ணிறத்ததாகிய பாலைப் பருகிய சிவந்த காலையுடைய அன்னப் பறவை; தாமரைத் தவிசின் மீமிசை உறங்கும் = தாமரை மலராகிய ஆதனத்தின்மேல் தூங்குகின்ற; கண் அகன் கழனி விண் அகடு உரிஞ்சும் நொச்சி சூழ் கிடந்த கச்சிமாநகரமும் = இடமகன்ற வயல்களையுடைய ஆகாயத்தின் மத்தியைத் தீண்டும் மதிலாற் சூழப் பட்ட கச்சியாகிய பெரிய நகரமும்;

மேதி, சொரிந்த, பாலருந்திய, அன்னம், உறங்கும், கழனி (யையுடைய) நகரமும் எனக் கூட்டுக.

உமை—ஏழாம் வேற்றுமையுருபு; தாமரை—பொருளாகு பெயர். மீமிசை—ஒரு பொருட் சொற்கள்.

கவை=பிளவு. கழனி=வயல். நொச்சி=மதில். கச்சி=காஞ்சிபுரம்; இது முத்தித்தலங்கள் ஏழனுளொன்று. வெடித்தல்=பல்கால் வீசுதல்; இதனை, 'விண்டுவு முடைய வாலின் வெடித்தாய்' (சிந்தா—கனகமாலை யாரிலம்பகம். 193.) என்பதனுரையானறிக.

தண்டளிர்க் கோட்டுப் பிண்டிமுதல் பெயர்த்து
வெறிகமழ் சந்தனச் செறிவுகெட முருக்கி
விண்புகு நெடுஞ்சினைச் சண்பகஞ்சாடிக்
காழுடை யகிற்றிரள் வீழ்தர நூக்கி
மங்குல்கண் படுக்குங் குங்குமஞ் சாய்த்து
மிளிர்மணி யருவிக் குளிர்புனன் முகந்து
தூம்புடை நெடுங்கையிற் றூய்விளை யாடு
மீர்ங்கவுட் புகர்முகக் கூர்ங்கோட் டிறற்கால்
வெஞ்சினக் குஞ்சர மஞ்சவரு நெஞ்சொடு
பசுந்தழை பொதுளிய விசும்புற நிமிர்ந்து
வாரியுண் டெழுதரு மழையொடு முரணும்
புதுவேய்ப் பொதும்பரிற் கதுமென வொளிக்க
வடங்கருஞ் சினத்து முடங்குளை நோன்றாட்
பெருவலி யரிமா னுருமென வதிர்க்கு
மணிகிள ரடுக்கத் தருணையங் கிரியும்

(இ - ள்) தண் தளிர்க் கோட்டுப் பிண்டிமுதல் பெயர்த்து = குளிர்ந்த இலைகளையுடைய கிளைகளையுடைய அசோகமரத்தின் அடியினை நின்ற நிலையினின்று பெயர்த்தும்; வெறிகமழ் சந்தனச் செறிவு கெடமுருக்கி = மணம் வீசுகின்ற சந்தனமரத்தினது நெருக்கம் குலையும்படி முறித்தும்; விண்புகு நெடுஞ்சினைச் சண்பகம் சாடி = விண்ணுலகத்தே செல்லும் நீண்டகிளைகளையுடைய சண்பகமரத்தை ஒடித்தும்; காழுடை அகில்திரள் வீழ்தர நூக்கி = உள்வயிரமுடைய அகிற்கூட்டத்தைக் கீழே விழும்படி காலானெற்றியும்; மங்குல் கண்படுக்கும் குங்குமம் சாய்த்து = மேகம் உறங்குவதற்கேற்ற குங்கும

மரத்தைக் கீழே தள்ளியும் ; மின்னிர் மணி அருவிக் குளிர்புனல் = ஒளி விளங்கும் முத்துக்களையுடைய ஆற்றின் தண்ணிய நீரை ; தும்புடை நெடுங்கையில் முகந்து தூய் விளையாடும் = துளையையுடைய நீண்ட துதிக்கையால் மொண்டு அந்நீரைத் தூவி விளையாடாநிற்கும் ; ஈர்ங் கவுள் புகர்முகக் கூர்ங்கோட்டு உரற்கால் வெஞ்சினக் குஞ்சரம் அஞ்சு வரு நெஞ்சொடு = குளிர்ந்த கதுப்பினையும், புள்ளியினையுடைய முகத்தினையும், கூர்மையுடைய தந்தத்தினையும், உரல் போன்ற அடியினையும், வெவ்விய கோபத்தினையுமுடைய யானை வெருண்ட மனத் தோடு ; விசும்புற நிமிர்ந்து வாரி உண்டு எழுதரு மழையொடு மாறு பசுந்தழைப் பொதுளிய புதுவேய்ப் பொதும்பரில் கதுமென ஒளிக்க = ஆகாயத்தைத் தீண்டும்படி வளர்ந்து கடல் நீரைக் குடித்து எழுகின்ற மேகத்தோடு மாறுபடாநின்ற பசிய இலைகள் செறிந்த புதியமூங்கிற் காட்டின்கண் விரைந்து மறையும்படி; அடங்கருசினத்து முடங்கு உளை நோன்தாள் பெருவலி = தடுத்தற்கரிய கோபத்தினையும், வளைந்த புறமயிரினையும், வலிய அடியினையும், மிக்க வன்மை யினையுமுடைய ; அரிமான் உருமென அதிர்க்கும் அணிகிளர் அடுக் கத்து அருணையங்கிரியும் = சிங்கம் இடியோசை போலக் கர்ச்சிக்கும் அழகு விளங்குகின்ற மலைப் பக்கத்தினையுடைய திருவண்ணாமலை யாகிய திருப்பதியும் ;

பெயர்த்தும், முருக்கியும், சாடியும், தூக்கியும், சாய்த்தும், முகந்தும், தூய்விளையாடும், குஞ்சரம் ஒளிக்க, அரிமான் அதிர்க் கும், அடுக்கத்து அருணையங்கிரியும் எனக் கூட்டி முடிக்க.

உம்மைகள் தொக்கன. மணிகிளர் — (154) எனக்கூறி இரத்தி னங்கள் விளங்கும் எனினுமமையும். நோன்றாட் பெருவலி என்பதற்கு வலிய அடியினது மிக்க வலியினையுடைய எனினுமாம்.

பிண்டி = அசோகு. வெறி = மணம். காழ் = வயிரம். விண்— ஆகுபெயர். கண்படுக்கும் = உறங்கும், (ஒருசொல்). தூய்—தூவி என் னும் செய்தெனெச்சம் தூய் எனச் செய்யுளிடத்து விகாரப்பட்டு நின்றது. இதனை " செய்து செய்யூ " (தொல்—சொல்—228) என் னும் சூத்திரத்துச் சேனாவரையருரையானறிக. அருவி = மலை யாறு. வாரி = கடல். அரிமான் = சிங்கம். அடுக்கம் = மலைப்பக்கம். தும்பு = துளை. உரும் = இடி. உளை = புறமயிர்.

155. மணிவரன் றருவிவீழ் மல்லிகார்ச் சுனமும்

(இ - ள்) மணி வரன்றி வீழ் அருவி மல்லிகார்ச்சுனமும் = முத்துக்களை வாரிக்கொண்டு இழிகின்ற யாற்றினையுடைய * மல்லிகார்ச்சுன பர்வதமும்;

சோதி மாமரஞ் சுடுதழற் பிழம்பென்
றிளமட மந்தி யேறா தகலுந்
திருக்கா ளத்தியா முருக்கிளர் பொருப்பும்

(இ -ள்) சோதி மாமரம் சுடுதழல் பிழம்பென்று = சோதித் தருவாகிய பெரிய மரத்தைச் சுடுகின்ற தீயினது வடிவமாகக் கருதி; இளமடமந்தி ஏறாது அகலும் திருக்காளத்தியாம் உருக்கிளர் பொருப்பும் = இளமையும் அறியாமையுமுடைய மந்திகள் அதன்மேல் ஏறிச் செல்லாது நீங்குகின்ற திருக்காளத்தியாகிய அழகு விளங்குகின்ற மலையும்;

மந்தி, பிழம்பென, அகலும், காளத்தியாம், பொருப்பு மென்க.

சோதிமரம் = ஒளியுருவமாக நிற்பதோர் மரம். சோதி மரத்தை இவ்வாசிரியர், "திங்கள்தன் னருகு மீக்கட் சென்றிடப் பிறையெயிற்று, மங்குலி நிறத்துப் பன்றி மண்கிளைத் தடியி னிற்பப், பொங்கொளி விரிக்குஞ் சோதிப் புதுமர னிற்றன் மாலும், பங்கயத் தவனுந் தேடப் படுதழற் பிழம்பை யொக்கும்." (சீகாள-தென்கயி — 15). என்று வருணித்தலும், "செங்கதி ரவனெ ழுந்த திவாவிடைக் குடம்பை தெற்றிப், பொங்கொளி மரத்திற் சேர்சால் புள்ளினம் பொறையுயிர்த்துக், கங்குலி னடைகி டப்பக் கருதி வந்ததனைக் கண்டு, வெங்கனல் கொளுந்திற் றென்று மீமிசைச் சுழன்றிறங்கும்." (பிரபு — கோரக்கர்—19) என்று சிவப்பிரகாச அடிகள் அருளியதும் அறியத் தக்கன. தழற் பிழம் பல்லாததனையும் அங்ஙனங் கருதும் விபரீதவுணர்ச்சி நோக்கி இளமட மந்தி என்றார்.

தரு = மரம். பொருப்பு = மலை. திருக்காளத்தி = சீகாளத்தி, தென்கயிலாய மென்பர்.

---

* மல்லிகார்ச்சுனம்—இதனைத் திருப்பருப்பதம் எனவும், ஸ்ரீ சைலம் எனவும் கூறுப. ஸ்ரீ நந்தி மகதேவர் பூசித்த தலம். சமயாசாரியர் மூவராலும் பாடப்பட்டது. இது கர்நூல் ஜில்லாவில் நந்தியாலுக்குப் பக்கத்திலுள்ளது.

மீன்கணத் தகவயின் விளங்குவெண் டிங்களி
னொழுகொளி நித்திலக் குழூஉவினுள் வலம்புரிச்
சங்குகிடந் துறங்கும் பொங்குபுனற் பழனத்துக்
கரும்படு களம ரிரும்பு கைவிடுத்
தடிபெயர்த் தோடிக் குடவளை யிடறி
யெழுநீர்ப் பசுந்தாட் கழுநீர்க் குப்பையுள்
வண்டினம் வெரீஇயொலி கொண்டெழ வீழ
நெடுநெறிக் கரும்பி னெருக்கிடைக் கிடந்த
கடுவரா லுகளுங் கம்பலை யவியா
வொருவாச் செல்வத் திருவா ரூரும்

(இ - ள்) மீன்கணத்து அகவயின் விளங்கு வெண் திங்களின் = உடுக் கூட்டத்தின் நடுவில் விளங்குகின்ற வெள்ளிய சந்திரனைப் போல; ஒழுகு ஒளி நித்திலக் குழூஉவினுள் வலம்புரிச் சங்கு கிடந்து உறங்கும் பொங்கு புனல் பழனத்து = மிக்க விளக்கத்தினையுடைய முத்துக் குவையினுள் வலம்புரிச் சங்கு கிடந்து நித்திரை செய்தற்கிடமாகிய மேன்மேலதிகரிக்கின்ற நீரினையுடைய வயலிடத்து; கரும்பு அடு களமர் இரும் புகை விடுத்து = கரும்பின் சாற்றைக் காய்ச்சுகின்ற மள்ளர் அதனிடத்துண்டாகும் மிக்க புகையை விட்டு நீங்கி; அடி பெயர்த்து ஓடிக் குடவளை யிடறி = காலைத் தூக்கியோடி ஆங்குள்ள குடம் போலும் சங்கு இடறுதலால்; எழுநீர்ப் பசுந்தாள் கழுநீர்க் குப்பையுள் = அதிகரிக்கின்ற நீரின்கண் பசிய நாளத்தினையுடைய செங்கழுநீர் மலர்க் கூட்டத்தில்; வண்டினம் வெரீஇ ஒலி கொண்டெழ வீழ = வண்டின் கூட்டம் அச்சமுற்று ஓசையோடு பறக்கும்படி கீழே விழுதலால்; நெடு நெறிக் கரும்பின் நெருக்கிடைக் கிடந்த கடு வரால் உகளும் கம்பலை அவியா ஒருவாச் செல்வத் திருவாரூரும் = நீட்சியும் ஒழுங்குமுடைய கரும்பின் செறிவையுடைய வயலி லிருந்த மிக்க வரால் மீன்கள் துள்ளுகின்ற ஓசை யடங்காத நீங்குதலில்லாச் செல்வத்தையுடைய திருவாரூராகிய திருப்பதியும்;

வெண்டிங்களின், சங்கு உறங்கும், பழனத்து, களமர் விடுத்து, ஓடி, இடறி, வீழ, உகளும், கம்பலை யவியா, திருவாரூர் என்க.

அவியா, ஒருவா என்பன ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள். வெரீஇ — சொல்லிசையளபெடை. கரும்பு—ஆகுபெயர். அகம்

= உள். வயின் — ஏழாம் வேற்றுமைச் சொல். எழுநீர் — வினைத்தொகை. மீன், உடு = நக்ஷத்திரம். கழுநீர் = செங்கழுநீர். பழனம் = வயல்.

ஆரங் குங்கும மகில்கரி மருப்புப்
பொன்மணி முதலிய பொருதிரைக் கையால்
விரிபொழி னிமிர்ந்ததன் னிருகரை மருங்கினும்
வாழ்நர்க் குதவு மணிமுத் தாறெனும்
பெருநதி யுடுத்த திருமுது குன்றமும்

(இ - ள்) ஆரம் குங்குமம் அகில் கரி மருப்புப் பொன் மணி முதலிய = சந்தனக் கட்டைகளும், குங்குமக் கட்டைகளும், அகிற் கட்டைகளும், யானைத் தந்தங்களும், பொன்னும், முத்தும் முதலிய பொருள்களை; பொரு திரைக் கையால் = (கரையை) மோதுகின்ற அலைகளாகிய தன் கைகளால்; விரி பொழில் நிமிர்ந்த தன் இரு கரை மருங்கினும் வாழ்நர்க்கு உதவும் = அகன்ற சோலையினையுடைய உயர்ந்த தன் இரண்டு கரைப் பக்கத்தும் வசிப்பவர்களுக்குத் தானே விரும்பிக் கொடுக்கும்; மணிமுத்தாறு எனும் பெருநதி யுடுத்த திருமுது குன்றமும் = திரு மணிமுத்தாநதி யென்று சிறப்பித்துச் சொல்லப்படும் விருத்த நதியைத் தன்னிடத்தே கொண்ட திரு முதுகுன்றமாகிய திருப்பதியும் (விருத்தாசலமும்);

திரைக்கையால், உதவும், பெருநதியுடுத்த, திருமுதுகுன்றம் என்க.

தொக்க வும்மைகள் விரிக்கப்பட்டன. ஆரம் முதலியவைகள் குறிஞ்சி நிலத்திலிருந்து கொண்டு வந்தவையாம். பெருநதி = விருத்த நதியென்பது 'கிழவுரு விருத்தநதி யெனப்பட்டு' (பெரியநாயகி — நெடுங்கழி—2 செ.) என்பதாலறிக. திரைக்கை—பண்புத்தொகை.

வரையக வெறிந்து மாமுதற் றடிந்த
மணிநெடு வேலொடு வளர்பூங் குடுமி
முள்ளுடை நெடுந்தாட் புள்ளணி கொடியோன்

(இ - ள்) வரை பக எறிந்து = (முன்னர்). கிரவுஞ்சமலை பிளவுபடும்படி எறிந்து; மாமுதல் தடிந்த = (பின்னர்) அவர்களுக்குத் தலைவனை சூர்ஞ்கிய மாமரத்தினை வீழ்த்திய; மணி நெடு வேலொடு =

மணி செறிக்கப்பட்ட நெடிய வேலாயுதத்தோடு ; வளர் பூங்குடுமி = உயர்ந்த அழகிய வுச்சிக் கொண்டையினையும் ; முள்ளுடை நெடுந்தாள் = கூர்மையுடைய நெடிய காலினையுமுடைய ; புள் அணி கொடியோன் = கோழியை அலங்கரித் தெழுதப்பட்ட கொடியினையுடையவனும் ;

வள்ளிபுரை மருங்குல் வள்ளிமா துக்குஞ்
சேயரி நெடுங்கட் டெய்வயா னைக்குங்
காணியென் விளங்கும் பூணணி மார்போன்

(இ - ள்) வள்ளி புரை மருங்குல் வள்ளி மாதுக்கும் = கொடியை யொத்த இடையினையுடைய வள்ளிநாயகியாருக்கும் ; சேய் அரி நெடுங்கண் தெய்வயானைக்கும் = செவ்வரி படர்ந்த நீண்ட கண்களையுடைய தெய்வநாயகியாருக்கும் ; காணியென விளங்கும் பூண் அணி மார்போன் = உரிமை நிலமாகத் திகழும் ஆபரணம் அணிந்த திருமார்பினை யுடையவனும் ;

அருணனி சுரக்கு மறுமுகத் தொருவன்

(இ - ள்) அருள் நனி சுரக்கும் அறுமுகத்து ஒருவன் = தன்னடியாரிடத்து அருளை மிகவும் பெருக்குகின்ற ஆறு திருமுகங்களையுடைய ஒருவனும் ;

தன்னிக ரில்லாத் தனி முதற் கடவுள்

(இ - ள்) தன் நிகரில்லாத் தனிமுதற் கடவுள் = தனக்கு ஒப்பாரொருவருமில்லாத ஒருவனாகிய முதற் கடவுளாவானும் ;

வெட்சிமலர் சூழ்ந்ததன் விரைமலர்த் திருவடி
யுள்ளுநர் தமக்குங் கள்ளவிழ் சேயிதழ்
அல்லியந் தாமரைச் செல்வனும் வணங்கும்
பெறலரு மரசு பெறவினி தளிப்போன்

(இ - ள்) வெட்சி மலர் சூழ்ந்த தன் விரை மலர்த் திருவடி உள்ளுநர் தமக்கும் = வெட்சி மலர் மாலையை யணிந்த தனது மண முண்டைய தாமரை மலர் போலும் திருவடியை (ச் சென்று வணங்காது ஒருகால்) நினைப்பவர்களுக்கும் ; கள் அவிழ் சேயிதழ் அல்லியம் தாமரைச் செல்வனும் = தேனொழுகும் சிவந்த விதழை யகத்தே யுடைய தாமரைக் கண் வீற்றிருக்கும் பிரமனும் ; வணங்கும் பெறலரும்

அரசுபெற இனிது அளிப்போன் = இறைஞ்சும் பெறுதற்கரிய மேலாகிய பதவியை அடையுமாறு நல்குறக் கொடுப்பவனும் ;

தேங்கமழ் கடம்பின் றெரியல் றுயல்வரூஉம்
பன்னிரு தடந்தோட் பண்ணவ னிருந்த
பனியிரு விசும்புதோய் பரங்குன் றிழியு
மணியருவி கொழித்த மணிகிடந் திமைக்குந்
திருமலி மறுகிற் செந்தமிழ்க் கூடலும்

(இ - ள்) தேங்கமழ் கடம்பின் தெரியல் துயல் வரூஉம் = மணம் வீசுகின்ற கடப்பமலர்மாலை புரளும்; பன்னிரு தடந்தோள் பண்ணவன் இருந்த = பன்னிரண்டு பெரிய தோள்களையுடைய முருகக்கடவுள் எழுந்தருளியிருந்த ; பனி இரு விசும்புதோய் பரங்குன்று இழியும் = குளிர்ச்சியினையுடைய பெரிய ஆகாயத்தைத் தீண்டுகின்ற திருப்பரங் குன்றினின்றும் இறங்கும் ; மணி அருவி கொழித்த மணி கிடந்து இமைக்கும் = அழகிய அருவி ஒதுக்கிய இ ர த் தி ன ங் க ள் கிடந்து விளங்குகின்ற ; திருமலி மறுகிற் செந்தமிழ்க் கூடலும் = செல்வம் நிறைந்த வீதிகளையுடைய செந்தமிழ் நிலைபெற்ற மதுரையாகிய திருப்பதியும் ;

கொடியோன், மார்போன், ஒருவன், முதற் கடவுள், அளிப்போன், பண்ணவன் இருந்த பரங்குன்றிழியும், அ ரு வி, மணி, இமைக்கும், மறுகினையுடைய, கூடல் என முடிக்க.

தொக்க வும்மைகள் விரிக்கப்பட்டன.

ஆறுமுகங்களை யுடையவனாயினும் ஒருவனே யாவனென்பார் அறுமுகத்தொருவ னென்றார். ஆறுமுகம் என்றதற் கேற்பப் பன்னிரு தடந்தோள் பண்ணவன் என்றார். வரை பகவெறிந்தோன், சூர்ப்பகைவன், ஆண்டலைக் கொடியுயர்த்தோன், வேலினுக்கிறை, வள்ளி மணாளன், தெய்வயானை காந்தன், ஆறுமுகன், கடம்பன் என்ற முருகன்றிரு நாமங்கள் ஈண்டறியத்தக்கன. வெட்சிமலர், கடம்பமலராகியவை முருகனுக்குரிய பூக்கள். அல்லி = அகவிதழ். வேலொடு—ஒடு உடனிகழ்ச்சிப் பொருளது. கூடல் = மதுரை; முத்திதலங்களுளொன்று. 'செந்தமிழ்க் கூடல்' என்பது 'தமிழ் கெழு கூடல்' (புறம்—58.) என்பதனும், 'செழியன்—தமிழ் நிலைபெற்ற தாங்கரு மரபின், மகிழ்நனைமறுகின் மதுரை" (சிறுபாண் — 65-7.)

என்பதனுலுமறிக. வரைபக வெறிந்த வரலாறும், சூரனைத் தடிந்த வரலாறும் கந்த புராணத்திற் காண்க.

தமிழ்குடி யிருந்த தடவரைத் தோன்றி
யிமிழ்திரை ஞாலத் தமிழ்தெனக் கிடந்த
தண்பொருநை யுடுத்த விண்பொரு நெடுமதி
னெல்லையு முதலிய பல்பெரும் பதிக
ளனைத்தினுங் கண்டோர்க் ககற்றரும்
வினைத்தொடர் பகல வீற்றிருந் தெனவே.

(இ - ள்) தமிழ் குடி இருந்த தடவரைத் தோன்றி = தமிழ் நிலைபெற்றிருந்த பெரிய பொதிய மலையினின்றும் உற்பத்தியாகி; இமிழ்திரை ஞாலத்து அமிழ்தெனக் கிடந்த = ஒலிக்கின்ற அலைகளையுடைய கடலாற் சூழப்பட்ட பூமியின்கண் அமிர்தமென்று சொல்லும்படி ஒழுகிய; தண் பொருநை உடுத்த விண்பொரு நெடுமதில் நெல்லையும் முதலிய பல் பெரும் பதிகள் அனைத்தினும் = குளிர்ச்சியினையுடைய பொருநையாற்றைத் தன்கண்ணே யுடைய ஆகாயத்தைத் தீண்டு கின்ற வுயர்ந்த மதில்களையுடைய திருநெல்வேலி என்னும் திருப்பதியு முதலாகிய பல சிறந்த திருத்தலங்கள் எல்லாவற்றினும்; கண்டோர்க்கு அகற்றரும் வினைத் தொடர்பு அகல வீற்றிருந்தெனவே = தன்னைத் தரிசித்தவர்களுக்குக் (காண்பதற்கு முன்) நீக்குதற்கரியதாயிருந்த வினையாகிய பந்தம் தானே விலக எழுந்தருளியிருந்தாற் போலவே.

தோன்றி, கிடந்த, பொருநை யுடுத்த, நெல்லையுமுதலிய பதிகளனைத்தினும், கண்டோர்க்கு, வினைத் தொடர் பகல, வீற்றிருந்தெனவே என முடிக்க.

அனைத்தினும்—முற்றும்மை. பொருநை= தாமிரபர்ணியாறு.

அளியனுந் தற்பெறக் களிமிகுந் தினிதினே
தன்னை யெனக்குத் தானீந் தருள்புரிந்
தென்னிடத் தொழிவின் றிருந்தனன் மன்னே.

(இ - ள்) அளியனும் தற்பெற= அளிக்கத் தக்கவனாகிய யானும் சுத்தம் சுகம் நித்தியமாகிய தன்னை யடைய; களிமிகுந்து இனிதின் = உவகை மிக்கு இனிதாக; தன்னை எனக்குத் தான் ஈந்து அருள்

புரிந்து = தன்னியல்பை அடியேனுக்குத் தானே செவி யறிவுறுத் தித் திருவருள் செய்து; என்னிடத்து ஒழிவின்று இருந்தனன் = (பல தலங்களிலும் வீற்றிருந்த அவன் என்து இடது காத்திடத்து நீக்க மின்றி வீற்றிருந்தனன். (எ - று.)

மன், ஓ — அசை. இடம் என்றது ஈண்டு இடது காத்தை யுணர்த்தி நின்றது. வீரசைவ சமயிகள் இடது காத்தில் சிவலிங்கப் பெருமானை எழுந்தருளச் செய்து பூசித்தல் மாபென்பது ஈண்டறிக. இதனைக் கைத்தலமாலை செய்யுள்களானறிக.

பெரியோன்றானும், திசை முகத்தொருவனும், காண்டல் செல் லாது நின்றோன், நகைத் தோன், சடையோன், நெற்றி நாட்டத் தோன், மிடற்றோன், பொருப்பினன், கைத்தலத்தோன், மார்யோன், அரையோன், கழலடியோன், விடைவல னுயர்த்தோன், இடமருங் குடையோன், பெற்றியனல்லோன், இல்லோன், தலைவன், உரு வொடு வந்து, நோக்கிய, ஒளிசிறந்தன்று, அவ்வழி, காசியம் பதியும், தில்லையம் பதியும், கச்சிமாநகரமும், அருணையங் கிரியும், மல்லிகார்ச் சுனமும், திருக்காளத்தியாம் பொருப்பும், திருவாரூரும், திருமுது குன்றமும், கூடலும், நெல்லையம் பதியு முதலிய பெரும்பதிகளனைத் திலும் வீற்றிருந்தெனவே, என்னிடத்து இருந்தனன் எனக் கூட்டி வினைமுடிபு செய்க.

(கருத்துரை) எல்லாமாய இறைவன் தன் திருவுளத்தில் மூவகைத் துன்பங்களை யனுபவிக்கும் என்னையும் ஆட்கொள்ளக் கருதி பூமி யின் கண் குருதேவன் எனப் பெயரிய திருவுருவத்தோ டெழுந்தருளி அடியேன் மீது திருக்கடைக்கண் சாத்தி யருளியதால் மாயைகெட ஞானமிகுந்தது. அவ்வழி காசி முதலிய பல திருத் தலங்களிலும் எழுந் தருளி யிருந்தாற் போலவே என் இடக்கரதலத்தும் நீக்கமின்றி வீற் றிருந்தனன்.

இதனான் இம்பிரபந்தம் இறைவன் துதியாக இயற்றப்பட்டமை அறிக.

**கருணைப்பிரகாச சுவாமிகள் கழலிணை வாழ்க**

**இஷ்டலிங்க வகவல் மூலமும் உரையும்**

**முற்றிற்று**



# பதிப்பித்த புத்தகங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | சித்தாந்த சிகாமணி உரை ... | 2 | 8 | 0 |
| 2. | வசவபுராணம் உரை ... | 8 | 0 | 0 |
| 3. | வீராசாரக் கட்டளை ... | 0 | 1 | 6 |
| 4. | பிக்ஷாடண நவமணிமாலை யுரை ... | 0 | 2 | 0 |
| 5. | பெரிய நாயகியம்மை விருத்தம் உரை ... | 0 | 3 | 0 |
| 6. | வீரசைவ விளக்க வினாவிடை | 0 | 12 | 0 |
| 7. | அநுபவஸாரம் (வேதாந்த நூல்) ... | 0 | 5 | 0 |
| 8. | மணிவாசகப்பெருமான் வரலாற்று வினாவிடை | 0 | 7 | 0 |
| 9. | ஸ்ரீ வைஷ்ணமும் வீரசைவமும் ... | 0 | 2 | 0 |
| 10. | தகனமும் கனனமும் ... | 0 | 1 | 0 |
| 11. | அல்லமாப் பிரபுதேவர் சரித்திரம் ... | 0 | 1 | 0 |
| 12. | அக்க மாதேவி சரித்திரம் ... | 0 | 1 | 0 |
| 13. | குமாரதேவர் [illegible] உரை | 0 | 6 | 0 |

# இனிப்பதிப்பிக்கும் புத்தகங்கள்

1. வீரசைவ சிவபூஜாவிதி
2. வீராகமம்
3. இஷ்டலிங்க வபிஷேகமாலை யுரை
4. பழமலையந்தாதி யுரை
5. பிரபுலிங்கலீலை யுரை
6. வசவதேவர் சரித்திரம்
7. வீரசைவ போதம்
8. வீரசைவ தத்துவப் பிரகாசிகை
9. இல்லற தருமம்
10. வீரசைவ மதம்
11. அத்வைதமதம்
12. விசிஷ்டாத்வைதமதம்
13. த்வைத மதம்

